புலவுப்புலி துறந்த கலவுக்கழி கடுமுடை
யிரவுக்குறும் பலற நூறி நிரைபகுத்
திருங்கண் முடுக்கர்த் திற்றி கெண்டுங்
கொலைவி லாடவர் போலப் பலவுடன்
பெருந்தலை யெருவையொடு பருந்துவந் திறுக்கு
மருஞ்சுர மிறந்த கொடியோர்க் கல்கலு
மிருங்கழை யிறும்பி னாய்ந்துகொண் டுறுத்த
நுணங்குகட் சிறுகோல் வணங்கிறை மகளிரொ
டகவுநர்ப் புரந்த வன்பிற் கழறொடி
நறவுமகி ழிருக்கை நன்னன் வேண்மான்
வயலை வேலி வியலூ ரன்னநின்
னலர்முலை யாகம் புலம்பப் பலபுலந்
தாழே லென்றி தோழி யாழவென்
கண்பனி நிறுத்த லெளிதோ குரவுமலர்ந்
தற்சிர நீங்கிய வரும்பவிழ் வேனி
லறலவிர் வார்மண லகலியாற் றடைகரைத்
துறையணி மருதமொ டிகல்கொள வோங்கிக்
கலிழ்தளி ரணிந்த விருஞ்சினை மாஅத்
திணர்ததை புதுப்பூ நிரைத்த பொங்கர்ப்
புகைபுரை யம்மஞ் சூர
நுகர்குயி லகவுங் குரல்கேட் போர்க்கே.

என்பது : வற்புறுக்குந் தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

— மாமூலனார்.

(பி - ம். 11. பண்பிற். 14. னகமலியாகம். 20. மாத்திணர் ததை. ஔவையார். குடவுழுந்தனார்.

## 98. குறிஞ்சி

* பனிவரை நிவந்த பயங்கெழு கவாஅற்
றனியில் கொள்கையொ டவர்நமக் குவந்த
வினிய வுள்ள மின்னா வாக

* இப் பாட்டினை "வெறியறி சிறப்பின் வெவ்வாய் வேலன், வெறியாட் டயர்ந்த காந்தளும" என்ற துறைக்கு உதாரண

முனிதக நிறுத்த நல்க லெவ்வஞ்
சூருறை வெற்பன் மார்புறத் தணித
லறிந்தன ளல்ல ளன்னை வார்கோற்
செறிந்திலங் கெல்வளை நெகிழ்ந்தமை நோக்கிக்
கையறு நெஞ்சினள் வினவலின் முதுவாய்ப்
பொய்வல் பெண்டிர் பிரப்புளர் பிரீஇ
முருக ணாரணங் கென்றலி னதுசெத்
தோவத் தன்ன வினைபுனை நல்லிற்
பாவை யன்ன பலராய் மாண்கவின்
பண்டையிற் சிறக்கவென் மகட்கெனப் பரைஇக்
கூடுகொ ளின்னியங் கறங்கக் களனிழைத்
தாடணி யயர்ந்த வகன்பெரும் பந்தர்
வெண்போழ் கடம்பொடு சூடி யின்சீ
ரைதமை பாணி யிரீஇக் கைபெயராச்
செல்வன் பெரும்பெய ரேத்தி வேலன்
வெறியயர் வியன்களம் பொற்ப வல்லோன்
பொறியமை பாவையிற் றூங்கல் வேண்டி
னென்னாங் கொல்லோ தோழி மயங்கிய
மையற் பெண்டிர்க்கு நோவ லாக
வாடிய பின்னும் வாடிய மேனி
பண்டையிற் சிறவா தாயி னிம்மறை

மாகக் காட்டி, "'இன்னாவாக ..... ..சிறந்த எவ்வம்' என்பது அவன் வயிற் பரத்தைமை; 'உயிர் வாழ்தல் அரிது' என்பது தன்வயினுரிமை; அவை வெறியஞ்சிய வழி நிகழ்ந்தன" என்றும், "'பனிவரைநிவந்த' என்னும் அகப்பாட்டினுள் 'பிரப்புளர் பிரீஇ' எனக் கட்டுவிச்சியைக் கேட்டவாறும், 'என் மகட்கு' எனச் செவிலிகூற்று நிகழ்ந்தவாறும் காண்க. இதனுள் 'நெடுவேள் நல்குவனெனினே' எனத் தலைவி அஞ்சவேண்டியது, இருவரும் (கட்டுவிச்சியும் வேலனும்) ஒட்டிக் கூறாமல் தெய்வந்தான் அருளுமென்று கோடலின்" என்றுங் கூறுவர் நச். இனிப் பேரா. "'பாவையன்ன பலராய் மாண்கவின்' என்புழி மகட்கண் காதல் காரணமாக உவமை பிறந்தது" என்பர், தொல். பொருள். 60, 111, 115, 279.)

யலரா காமையோ வரிதே யஃதான்
றறிவ ருறுவிய வல்லல்கண் டருளி
‘வெறிகமழ் நெடுவே ணல்குவ னெனினே
செறிதொடி யுற்ற செல்லலும் பிறிதெனக்
கான்கெழு நாடன் கேட்பின்
யானுயிர் வாழ்த லதனினு மரிதே

என்பது : தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழி தலைமகட்குச் சொல்லுவாளாய்ச் சொல்லியது. தோழிக்குத் தலைமகள் சொல்லியதூஉமாம்.

— வெறிபாடிய காமக்கண்ணியார்.

பி - ம். 4. முனிவுதகவந்த. 7. நெகிழ்தனோக்கி. 27. நல்குவனேயெனிற்.

## 99. பாலை

வாள்வரி வயமான் கோளுகி ரன்ன
செம்முகை யவிழ்ந்த முண்முதிர் முருக்கின்
சிதரற் செம்ம ருஅய் மதரெழின்
மாணிழை மகளிர் பூணுடை முலையின்
முகைபிணி யவிழ்ந்த கோங்கமொ டசைஇநனை
யதிரல் பரந்த வந்தண் பாதிரி
யுதிர்வீ யஞ்சினை தாஅ யெதிர்வீ
மராஅ மலரொடு விராஅய்ப் பராஅ
மணங்குடை நகரின் மணந்த பூவி
னன்றே கான நயவரு மம்ம
கண்டிசின் வாழியோ குறுமக ளுந்தை
யடுகளம் பாய்ந்த தொடிசிதை மருப்பிற்
பிடிமிடை களிற்றிற் றோன்றுங்
குறுநெடுந் துணைய குன்றமு முடைத்தே.

என்பது : உடன் போகிய தலைமகளைத் தலைமகன் மருட்டிச சொல்லியது. *

— பாலைபாடிய பெருங்கடுங்கோ.

பி - ம். 7. முதிர்வீ. 12. தொடி செறி 13. பிடியிடை.

* இத்துறைக்கே இப்பாட்டினைக் கொண்டார் நச்சினார்க்கினியரும். (தொல். பொருள் 41.)

## 100. நெய்தல்

அரையுற் றமைந்த வார நீவிப்
புரையப் பூண்ட கோதை மார்பினை
நல்லகம் வடுக்கொள முயங்கி நீவந்
தெல்லினிற் பெயர்த லெனக்குமா ரினிதே
பெருந்திரை முழக்கமொ டியக்கவிந் திருந்த
கொண்ட லிரவி னிருங்கடன் மடுத்த
கொழுமீன் கொள்பவ ரிருணீங் கொண்சுட
ரோடாப் பூட்கை வேந்தன் பாசறை
யாடியல் யானை யணிமுகத் தசைத்த
வோடை யொண்சுட ரொப்பத் தோன்றும்
பாடுநர்த் தொடுத்த கைவண் கோமான்
பரியுடை நற்றேர்ப் பெரியன் விரியிணர்ப்
புன்னையங் கானற் புறந்தை முன்றுறை
வம்ப நாரை யினனொலித் தன்ன
வம்பல் வாய்த்த தெய்ய தண்புலர்
வைகுறு விடியற் போகிய வெருமை
நெய்தலம் புதுமலர் மாந்தும்
கைதையம் படப்பையெம் மழுங்க லூரே.

என்பது : தோழி வரைவுகடாயது.

உலோச்சனார்.

பி-ம். 1. அரையற்றமை. 18. நெய்தற் புதுமலர்.

## 101. பாலை

அம்ம வாழி தோழி யிம்மை
நன்றுசெய் மருங்கிற் றீதில் லென்னுந்
தொன்றுபடு பழமொழி யின்றுபொய்த் தன்றுகொ
றகர்மருப் பேய்ப்பச் சுற்றுபு புரிந்த
சுவன்மாய் பித்தைச் செங்கண் மழவர்
வாய்ப்பகை கடியும் மண்ணொடு கடுந்திறற்
றீப்படு சிறுகோல் வில்லொடு பற்றி

நுரைதெரி மத்தங் கொளீஇ நிரைப்புறத்
தடிபுதை தொடுதோல் பறைய வேகிக்
கடிபுலங் கவர்ந்த கன்றுடைக் கொள்ளைய
ரினந்தலை பெயர்க்கு நனந்தலைப் பெருங்காட்
டகலிரு விசும்பிற் கூடம் போலப்
பகலிடை நின்ற பல்கதிர் ஞாயிற்
றுருப்பவிர் பூரிய சுழன்றுவரு கோடைப்
புன்கான் முருங்கை யூழ்கழி பன்மலர்
தண்கா ராலியிற் றாவன வுதிரும்
பனிபடு பன்மலை யிறந்தோர்க்கு
முனிதகு பண்பியாஞ் செய்தன்றோ விலமே.

என்பது : பிரிவிடை வேறுபட்ட கிழத்தி தோழிக்குச் சொல்லியது. 'தோழி கிழத்திக்குச் சொல்லியதூஉமாம். இப் பாட்டினுள் வாய்ப்பகை கடியு மருந்து என்றது இருமல் தீர்க்கும் மருந்து.

— மாமூலனார்.

பி-ம். 4. சுற்றுபு சுரிந்த. 12. கூட்டம். 15. வீகழிபன்மலர் 16. தாதின்றுதிரும். (தலைமகள்)

## 102. குறிஞ்சி

உளைமான் றுப்பி னோங்குதினைப் பெரும்புனத்துக்
கழுதிற் கானவன் பிழிமகிழ்ந்து வதிந்தென
வுரைத்த சந்தி னார விருங்கதுப்
பைதுவர லசைவளி யாற்றக் கைபெயரா
வொலியல் வார்மயி ருளரினள் கொடிச்சி
பெருவரை மருங்கிற் குறிஞ்சி பாடக்
குரலுங் கொள்ளாது நிலையினும் பெயராது
படாஅப் பைங்கண் பாடுபெற் றொய்யென
மறம்புகன் மழகளி றுறங்கு நாட
னார மார்பி னரிஞிமி றார்ப்பத்
தாரன் கண்ணிய னெஃகுடை வலத்தன்
காவல ரறிதலோம்பிப் பையென
வீழாக் கதவ மசையினன் புகுதந்

துயங்குபட ரகல முயங்கித் தோண்மணந்
தின்சொ லளைஇப் பெயர்ந்தனன் றோழி
யின்றெவன் கொல்லோ கண்டிகு மற்றவ
னல்கா மையி னயப்ப லாகி
யொருங்குவந் துலக்கும் பண்பி
னிருஞ்சூ ழோதி யொண்ணுதற் பசப்பே.

என்பது : இரவுக்குறிக்கட் சிறைப்புறமாகத் தோழிக்குச் சொல்லுவாளாய்த் தலைமகள் சொல்லியது.

— மதுரை யிளம்பாலாசிரியன் சேந்தங்கூத்தன்.

பி - ம். மதுரைப் பாலாசிரியன் சேனங் கூத்தன்.

## 103. பாலை

நிழலறு நனந்தலை யெழிலேறு குறித்த
கதிர்த்த சென்னி நுணங்கு செந்நாவின்
விதிர்த்த போலு மந்நுண் பல்பொறிக்
காமர் சேவ லேமஞ் சேப்ப
முளியரில் புலம்பப் போகி முனையது
முரம்படைந் திருந்த மூரி மன்றத்
ததர்பார்த் தல்கு மாகெழு சிறுகுடி
யுறையுநர் போகிய வோங்குநிலை வியன்மனை
யிறைநிழ லொருசிறை புலம்பயா வுயிர்க்கும்
வெம்முனை யருஞ்சுர நீந்தித் தம்வயி
னீண்டுவினை மருங்கின் மீண்டோர் மன்னென
நள்ளென் யாமத் துயவுத்துணை யாக
நம்மொடு பசலை நோன்று தம்மொடு
தானே சென்ற நலனு
நல்கார் கொல்லோநா நயந்திசி னோரே.

என்பது : தலைமகன் பிரிவின்கண் தலைமகள் தோழிக்குச் சொற்றது.

— காவிரிப்பூம்பட்டினத்துச் செங்கண்ணனார்.

பி - ம். 12. உயவுத் துணையாகிய. 13. தோன்றுக தம்மொடு.

## 104. முல்லை

*வேந்துவினை முடித்த காலைத் தேம்பாய்ந்
தினைவண் டார்க்குந் தண்ணறும் புறவின்
வென்வே லிளைய ரின்புற வலவன்
வள்புவலித் தூரி னல்லது முள்ளுறின்
முந்நீர் மண்டில மாதி யாற்றா
நன்னால்கு பூண்ட கடும்பரி நெடுந்தேர்
வாங்குசினை பொலிய வேறிப் புதல
பூங்கொடி யவரைப் பொய்யத ளன்ன
வுள்ளில் வயிற்ற வெள்ளை வெண்மறி
மாழ்கி யன்ன தாழ்பெருஞ் செவிய
புன்றலைச் சிறாரோ டுகளி மன்றுழைக்
கவையிலை யாரி னங்குழை கறிக்குஞ்
சீறூர் பலபிறக் கொழிய மாலை
யினிதுசெய் தனையா லெந்தை வாழிய
பனிவார் கண்ணள் பலபுலந் துறையு
மாய்தொடி யரிவை கூந்தல்
போதுகுர லணிய வேய்தந் தோயே.

**என்பது** : வினைமுற்றிமீளுந் தலைமகற்குத் தோழி சொல்லியது.

— மதுரை மருதனிளநாகனார்.

**பா-ம்.** 1. வேந்துவினை முடித்தனன். 3. ரன்புற. 6. நன்னான்கு 12. கொறிக்கும்.

## 105. பாலை

அகலறை மலர்ந்த வரும்புமுதிர் வேங்கை
யொள்ளிலைத் தொடலை தைஇ மெல்லென

* இப் "பாட்டினுள் சுட்டி ஒருவர்ப் பெயர்கூறா வஞ்சி பொதுவியலாய் வந்தவாறு காண்க" என்றும், "இதனுள் வினைமுடித்த காலைத் தேரிளையர் செலவிற் கேற்ப ஊராது கோலூன்றின் உலகிறந்தன செலவிற்குப் பற்றாத குதிரைத்தேரேறி இடைச்சுரத்திற் றங்காது மாலைக் காலத்து வந்து பூச்சூட்டினை, இனிது செய்தனை எந்தை வாழிய எனத் தோழி கூறியவாறு காண்க" என்றும் கூறுவர் நச். (தொல். பொருள். 60, 194.)

நல்வரை நாடன் றற்பா ராட்ட
யாங்குவல் லுநள்கொ றானே தேம்பெய்து
மணிசெய் மண்டைத் தீம்பா லேந்தி
யீனாத் தாயர் மடுப்பவு முண்ணா
ணிழற்கயத் தன்ன நீணகர் வரைப்பி
னெம்முடைச் செல்வமு முள்ளாள் பொய்ம்மருண்டு
பந்துபுடைப் பன்ன பாணிப் பல்லடிச்
சில்பரிக் குதிரைப் பல்வே லெழினி
கெடலருந் துப்பின் விடுதொழின் முடிமார்
கனையெரி நடந்த கல்காய் கானத்து
வினைவ லம்பின் விழுத்தொடை மறவர்
தேம்பிழி நறுங்கண் மகிழின் முனைகடந்து
வீங்குமென் சுரைய வேற்றினந் தரூஉ
முகைதலை திறந்த வேனிற்
பகைதலை மணந்த பல்லதர்ச் செலவே.

என்பது : மகட்போக்கிய தாய் சொல்லியது.

— தாயங்கண்ணனார்.

பி - ம். 1. அகவரை. 10. வல்வேலெ. 15. விலங்குமென்.

## 106. மருதம்

* எரியகைந் தன்ன தாமரைப் பழனத்துப்
பொரியகைந் தன்ன பொங்குபல் சிறுமீன்
வெறிகொள் பாசடை யுணீஇயர் பைப்பயப்
பறைதபு முதுசிர லசைபுவந் திருக்குந்
துறைகே ழூரன் பெண்டுதன் கொழுநனை
நம்மொடு புலக்கு மென்ப நாமது
செய்யா மாயினு முய்யா மையிற்
† செறிதொடி தெளிர்ப்ப வீசிச் சிறிதவ

* இவ்வடியினை வினையுவமத்திற்கு உதாரணமாகக் காட்டி,

† "செறிதொடி ...... தோழி" என்றக்காற் தலைவிக்குப் பாங்காயினார் கேட்பச் சொல்லிக் கூறல் வேண்டு மென்பது; வாயில்களும் தலைமகளை ஊடல்காப்பவல்லது சொல்லாரா

ணுலமந்து வருகஞ் சென்மோ தோழி
யொளிறுவாட் டானைக் கொற்றச் செழியன்
வெளிறில் கற்பின் மண்டம ரடுதொறுங்
களிறுபெறு வல்சிப் பாண னெறியுந்
தண்ணுமைக் கண்ணி னலைஇயர்தன் வயிறே.

என்பது : தலைமகள் தன்னைப் புறங்கூறினாளாகக் கேட்ட பரத்தை யவட்குப் பாங்காயினார் கேட்பச் சொல்லியது.

— ஆலங்குடி வங்கனார்.

பி - ம். 7. உய்யாமா. 8. சிறிதிவண். (கூறினாளென.)

## 107. பாலை

நீசெல வயரக் கேட்டொறும் பலநினைந்
தன்பி னெஞ்சத் தசாஅப்பொறை மெலிந்த
வென்னகத் திடும்பை களைமார் நின்னொடு
கருங்கல் வியலறைக் கிடப்பி வயிறுதின்
றிரும்புலி துறந்த வேற்றுமா னுணங்க
னெறிசெல் வம்பல ருவந்தன ராங்க
ணொலிகழை நெல்லி னரிசியொ டோராங்
கானிலைப் பள்ளி யளைபெய் தட்ட
வானிண முருக்கிய வால் அவெண்சோறு
புகரரைத் தேக்கி னகலிலை மாந்துங்
கல்லா நீண்மொழிக் கதநாய் வடுகர்
வல்லா னருமுனை நீந்தி யல்லாந்து
மன்னா றஞ்சு மொருகாற் பட்டத்
தின்னா வேற்றத் திழுக்கி முடங்கூர்ந்
தொருதனித் தொழிந்த வுரனுடை நோன்பக
டங்குழை யிருப்பை யறைவாய் வான்புழல்
புல்லுளைச் சிறாஅர் வில்லி னீக்கி
மரைகடிந் தூட்டும் வரையகச் சீறூர்

---

கலாற் தலைமகள் கேட்பாளாகச் சொல்ல வேண்டு மென்பது' என்பர் பேரா. (தொல். பொருள். 287, 712.)

மாலை யின்றுணை யாகிக் காலைப்
பசுநனை நறுவீப் பரூஉப்பர லுறைப்ப
மணமனை கமழுங் கானந்
துணையீ ரோதியென் றோழியும் வருமே.

**என்பது :** தோழி தலைமகள் குறிப்பறிந்துவந்து தலைமகற்குச் **சொல்லியது.**

— **காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனார்.**

**பி-ம்.** அன்புடை நெஞ்ச. 13. பன்னாறன்.

## 108. குறிஞ்சி

புணர்ந்தோர் புன்க ணருளலு முணர்ந்தோர்க்
கொத்தன்று மன்னா லெவன்கொன் முத்தம்
வரைமுதற் சிதறிய வைபோல் யானைப்
புகர்முகம் பொருத புதுநீ ராலி
பளிங்குசொரி வதுபோற் பாறை வரிப்பக்
கார்கதம் பட்ட கண்ணகன் விசும்பின்
விடுபொறி ஞெகிழியிற் கொடிபட மின்னிப்
படுமழை பொழிந்த பானாட் கங்கு
லாருயிர்த் துப்பிற் கோண்மா வழங்கு
மிருளிடைத் தமியன் வருதல் யாவது
மருளான் வாழி தோழி யல்கல்
விரவுப்பொறி மஞ்ஞை வெரீஇ யரவின்
னணங்குடை யருந்தலை பைவிரிப் பவைபோற்
* காயா மென்சினை தோய நீடிப்
பஃறுடுப் பெடுத்த வலங்குகுலைக் காந்த

* "காயா........வோனே" என்புழி ஆடுதற்றொழில் பற்றியும் வடிவு பற்றியும் வண்ணம் பற்றியும் உவமை வந்தது என்பர் பேரா. (தொல். பொருள். 277.) நச்சினார்க்கினியரும் **சுரும்பெழுந் திருந்துணுந் தொங்கல்'** என்னுமிடத்து "'நறுந் தா துதுதும்பி கையாடு வட்டிற்றோன்றும்' என்றார் பிறரும்" **என்பர். (சிந்., 661.)**

கையறு நெஞ்சத் தெவ்வ நீங்க
வழாஅ முறைதலு முரியம் பராரை
யலங்க லஞ்சினைக் குடம்பை புல்லெனப்
புலம்பெயர் மருங்கிற் புள்ளெழுந் தாங்கு
மெய்யிவ ணொழியப் போகி யவர்
செய்வினை மருங்கிற் செலீஇயரென் னுயிரே.

என்பது : தலைமகன் பிரிவின்கண் தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

— கல்லாடனார்

பி - ம். 2. திருவில் சூழ்சசி. 4. னன்மாயீஃ. பொற்றி. 10. கால்பொருஉ. 11. யகனல்கு. 16. நித்தி.

## 114. முல்லை

கேளா யெல்ல தோழி வேலன்
வெறியயர் களத்துச் சிறுபலி தாஅய
விரவுவீ யுறைத்த வீர்நறும் புறவி
னுரவுக்கதிர் மழுங்கிய கல்சேர் ஞாயி
றரவுநுங்கு மதியி னையென மறையுஞ்
சிறுபுன் மாலையு முள்ளா ரவரென
நப்புலந் துறையு மெவ்வ நீங்க
நூலறி வலவ கடவுமதி யுவங்கா
ணெடுங்கொடி நுடங்கும் வான்றோய் புரிசை
யாமங் கொள்பவர் நாட்டிய நளிசுடர்
வானக மீனின் விளங்கித் தோன்று
மருங்கடிக் காப்பி னஞ்சுவரு மூதூர்த்
திருநக ரடங்கிய மாசில் கற்பி
னரிமதர் மழைக்க ணமைபுரை பணைத்தோ
ளணங்குசா லரிவையைக் காண்குவம்
பொலம்படைக் கலிமாப் பூண்ட தேரே.

என்பது : வினைமுற்றி மீளூர் தலைமகன் தேர்ப்பாகற்குச் சொல்லியது.

பி - ம். 2. களந்தோ றுறுபல. 11. வானமீனின். (வருகின்ற.)

## 110. நெய்தல்

அன்னை யறியினு மறிக வலர்வா
யம்மென் சேரி கேட்பினுங் கேட்க
பிறிதொன் றின்மை யறியக் கூறிக்
* கொடுஞ்சுழிப் புகாஅர்த் தெய்வ நோக்கிக்
கடுஞ்சூ ளருகுவ னினக்கே கானற்
றொடலை யாயமொடு கடலுடன் றாடியுஞ்
சிற்றி லிழைத்துஞ் சிறுசோறு குவைஇயும்
வருந்திய வருத்தந் தீர யாஞ்சிறி
திருந்தன மாக வெய்த வந்து
தடமென் பணைத்தோண் மடநல் லீரே
யெல்லு மெல்லின் றசைவுமிக வுடையேன்
மெல்லிலைப் பரப்பின் விருந்துண் டியானுமிக்
கல்லென் சிறுகுடித் தங்கின்மற் றெவனோ
வெனமொழிந் தனனே யொருவ னவற்கண்
டிறைஞ்சிய முகத்தெம் புறஞ்சேர்பு பொருந்தி
யிவைநுமக் குரிய வல்ல விழிந்த
கொழுமீன் வல்சி யென்றன மிழுமெண
நெடுங்கொடி நுடங்கு நாவாய் தோன்றுவ

---

* "நெய்தல் நிலத்து நுளையர்க்கு வலைவளந் தப்பின் அம் மகளிர் கிளையுடன் குழீஇச் சுறவுக்கோடு நட்டு பரவுக்கடன் கொடுத்தலின் ஆண்டு வருணன் வெளிப்படும்" என்று கூறி, அதற்கு இவ்வடியினை உதாரணமாக்கியும், 'மெய்தொட்டுப் பயிறல்....." என்ற சூத்திரத்துப் "பிறவும்' என்றதனாற் கொள்க' என்று "மெல்லிலை......றெவனோ" என்ற வடிகளை உதாரணமாக்கியும், அச சூத்திரத்தே 'தலைவன் இரவுக்குறி வேண்டியதனைத் தோழி கூறியவாறு காண்க' என்றும், இது 'எளித்தல்' என்றும், '"பிறிதொன்......றினக்கே" இது தலைப்பாடு' என்றுங்கூறுவர், நச்சினார்க்கினியர். (தொல். பொருள். 5, 102, 207.) இனிச் சேனாவரையர் "'கொடுஞ்சுழிப் புகாஅர்த் தெய்வ நோக்கிக் கடுஞ்சூ ளருகுவ னினக்கே' என முன்தேற்று உணர்த்தியவாறு கண்டு கொள்க; முன்தேற்று - புறத்தின்றித் தெய்வ முதலாயினவற்றின் முன்னின்று தெளித்தல்" என்பர். (தொல். சொல். 383.)

காணு மோவெனக் காலிற் சிதையா
* நில்லாது பெயர்ந்த பல்லோ ருள்ளு
மென்னை குறித்த நோக்கமொடு நன்னுத
லொழிகோ யானென வழிதகக் கூறி
யாம்பெயர் கென்ன நோக்கித் தான்ற
னெடுந்தேர்க் கொடிஞ்சி பற்றி
நின்றோன் போலு மென்றுமென் கட்கே.

என்பது தோழி செவிலித்தாய்க்கு அறத்தொடு நின்றது.

— போந்தைப் பசலையார்

பி-ம். 5. நினக்கெனக். 8. வருந்திய வருஞ்சுரம். 25. நின்று மென்கட்கே 19. காவிற்சிதை.

## 111. பாலை

உள்ளாங் குவத்தல் செல்லார் கறுத்தோ
ரெள்ள னெஞ்சத் தேஎச்சொ னாணி
வருவர் வாழி தோழி யரசர்
யானைக் கொண்ட துகிற்கொடி போல
வலந்தலை ஞெமையத்து வலந்த சிலம்பி
யோடைக் குன்றத்துக் கோடையொடு துயல்வர
மழையென மருண்ட மம்மர் பலவுட
னோய்களி றெடுத்த நோயுடை நெடுங்கை
தொகுசொற் கோடியர் தூம்பி னுயிர்க்கு
மத்தக் கேழ லட்ட நற்கோட்
செந்நா யேற்றை கம்மென வீர்ப்பக்

* "'நில்லாது பெயர்ந்த பல்லோருள்ளும்' என்புழி முன்னர் எல்லாரும் உளப்பாடாகக் கூறிய தோழி ஈண்டும் பல்லோருள்ளும் என்றது தன்னை நீக்கிக்கூறிய தென்னை எனின்: தலைமகன் தன்னை நோக்கி அழிவுதகக்கூறி ஆற்றானாகி நின்ற நிலைமையைக் கண்டு அருள்பிறவாது ஆயமும் தலைவியும் போயவாறும், அதற்குத்தான் அழிவுதக்குநிற்றலின், அவரொடு போதலாற்றாது பின்னர்ப்போயவாறுந்தோன்றக் கூறுகின்றாளாதலிற் பல்லோருள்ளுமெனக் கூறினாள்" நச. (தொல். சொல். 463.)

குருதி யாரு மெருவைச் செஞ்செவி
மண்டம ரழுவத் தெல்லிக் கொண்ட
புண்டேர் விளக்கிற் றோன்றும்
விண்டோய் பிறங்கன் மலையிறந் தோரே.

என்பது: தலைமகன் பிரிவின்கண் தோழி தலைமகளை யாற்றுவித்தது.

— பாலைபாடிய பெருங்கடுங்கோ.

பி-ம். 1. உள்ளாங்குறுத்தல். 2. நல்லனெஞ். 14. புண்டோய்.

## 112. குறிஞ்சி

* கூனல் எண்கின் குறுநடைத் தொழுதி
சிதலை செய்த செந்நிலைப் புற்றின்
மண்புனை நெடுங்கோ டுடைய வாங்கி
யிரைநசைஇப் பரிக்கு மலைநாட் கங்கு
லீன்றணி வயவுப்பிணாப் பசித்தென மறப்புலி
யொளிறேந்து மருப்பிற் களிறட்டுக் குழுமும்
பனியிருஞ் சோலை யெமியே மென்னாய்
தீங்குசெய் தனையே யீங்குவந் தோயே
நாளிடைப் படினென் றோழி வாழா
டோளிடை முயக்க நீயும் வெய்யை
கழியாக் காதல ராயினுஞ் சான்றோர்
பழியொடு வரூஉ மின்பம் வெஃகார்
வரையி னெவனோ வான்றோய் வெற்ப
கணக்கலை யிகுக்குங் கறியிவர் சிலம்பின்
மணப்பருங் காமம் புணர்ந்தமை யறியார்

---

* "ஆற்றதுதீமை அறிவுறு கலக்கமும்" என்னுந் துறைக்கு இதனை உதாரணமாகக் கொண்டும், '"கழியக்......வெஃகார்" எனப் பிறர்மேல் வைத்துத் தலைவனை அறிவு கொளுத்தினமையின் வழுவாயமைந்தது" என்றும், '"பழியொடு வரூஉ மின்பம் வெஃகார்" எனவே, புகழொடு வரூஉம் இன்பம் வெஃகுவரெனக் கொள்ள வைத்தலின் நன்மையும் தீமையும் பிறிதின்மேல் வைத்துக் கூறிற்றும்' என்றும் கூறுவர் நச். பேரா. புகழ்பற்றிய பெருமிதம் என்பர். (தொல். பொருள். 114, 210, 257.)

தோன்றியன் மரபின் மன்ற லயரப்
பெண்கோ ளொழுக்கங் கண்கொள நோக்கி
நொதுமல் விருந்தினம் போலவிவள்
புதுநா ணொடுக்கமுங் காண்குவம் யாமே.

என்பது : இரவுக்குறி வந்த தலைமகனை யெதிர்ப்பட்டு நின்று தோழி சொல்லி வரைவுகடாயது.

— நெய்தற்சாய்த்துய்த்த ஆவூர்கிழார்.

பி - ம். 1. கானலெண்கின். கூரலெண்கின். கூருகிரெண்கின். 10. முயங்கமதி. 11. கழியக் காதல. 15. மணப்பெரும்.

## 113. பாலை

நன்றல் காலையு நட்பிற் கோடார்
சென்று வழிப்படூஉந் திரிபில் சூழ்ச்சியிற்
புன்றலை மடப்பிடி யகவுநர் பெருமகன்
மாவீசு வண்மகி ழஃதைப் போற்றிக்
காப்புக்கை நிறுத்த பல்வேற் கோச
ரிளங்கட் கமழு நெய்தலஞ் செறுவின்
வளங்கெழு நன்னா டன்னவென் றோண்மணந்
தழுங்கன் மூதூ ரலரொடு நுவற்ற
நல்காது துறந்த காதல ரென்றுங்
கல்பொரூஉ மெலியாப் பாடி னோனடி
யகன்சூ லஞ்சுரைப் பெய்த வல்சிய
ரிகழ்ந்தன ராயினு மிடம்பார்த்துப் பகைவ
ரோம்பின ருறையுஞ் சூழ்கெழு குறும்பிற்
குவையிமில் விடைய வேற்றுவொய்யுங்
கனையிருஞ் சுருணைக் கனிகாழ் நெடுவேல்
விழவயர்ந் தன்ன கொழும்பஃ றிற்றி
யெழாஅப் பாண னன்னாட் டும்பர்
நெறிசெல் வம்பலர்க் கொன்ற தெவ்வ
ரெறிபடை கழீஇய சேயரிச் சின்னீ
ரறுதுறை யயிர்மணற் படுகரைப் போகிச்
சேய ரென்றலிற் சிறுமை யுற்றவென்

கையறு நெஞ்சத் தெவ்வ நீங்க
வழாஅ முறைதலு முரியம் பராரை
பலங்க லஞ்சினைக் குடம்பைப் புல்லெனப்
புலம்பெயர் மருங்கிற் புள்ளெழுந் தாங்கு
மெய்யிவ ணொழியப் போகியவர்
செய்வினை மருங்கிற் செலீஇயரென் னுயிரே.

என்பது: தலைமகன் பிரிவின்கண் தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

— கல்லாடனார்

பி-ம். 2. திருவில் சூழ்ச்சி. 4. னன்மாய்ப. பொற்றி. 10. கால்பொருஉ. 11. யகனல்கு. 16. றித்தி.

## 114. முல்லை

கேளா யெல்ல தோழி வேலன்
வெறியயர் களத்துச் சிறுபலி தாஅய
விரவுவீ யுறைத்த வீர்நறும் புறவி
னுரவுக்கதிர் மழுங்கிய கல்சேர் ஞாயி
றரவுநுங்கு மதியி னையென மறையுஞ்
சிறுபுன் மாலையு முள்ளா ரவரென
நப்புலந் துறையு மெவ்வ நீங்க
நூலறி வலவ கடவுமதி யுவக்கா
ணெடுங்கொடி நுடங்கும் வான்றோய் புரிசை
யாமங் கொள்பவர் நாட்டிய நளிசுடர்
வானக மீனின் விளங்கித் தோன்று
மருங்கடிக் காப்பி னஞ்சுவரு மூதூர்த்
திருநக ரடங்கிய மாசில் கற்பி
னரிமதர் மழைக்க ணமைபுரை பணைத்தோ
ளணங்குசா லரிவையைக் காண்குவம்
பொலம்படைக் கலிமாப் பூண்ட தேரே.

என்பது: வினைமுற்றி மீளூர் தலைமகன் தேர்ப்பாகற்குச் சொல்லியது.

பி-ம். 2. களந்தோ றுறுபல. 11. வானமீனின். (வருகின்ற.)

## 115. பாலை

அழியா விழவி னஞ்சுவரு மூதூர்ப்
பழியில ராயினும் பலர்புறங் கூறு
மம்ப லொழுக்கமு மாகிய வெஞ்சொற்
சேரியம் பெண்டி ரெள்ளினு மெள்ளுக
நுண்பூ ணெருமை குடநாட் டன்னவென்
னாய்நலந் தொலையினுந் தொலைக வென்று
நோயில ராகநங் காதலர் வாய்வா
ளெவ்வி வீழ்ந்த செருவிற் பாணர்
கைதொழு மரபின்முன் பரித்திடூஉப் பழிச்சிய
வள்ளுயிர் வணர்மருப் பன்ன வொள்ளிணர்ச்
சுடர்ப்பூங் கொன்றை யூழுறு விளைநெற்
றுறைமிசைத் தாஅ மத்த நீளிடைப்
பிறைமருள் வான்கோட் டண்ணல் யானை
சினமிகு முன்பின் வயமா னஞ்சி
பிணங்கொண் டொளிக்கு மஞ்சுவரு கவலை
நன்ன ராய்கவின் றொலையச் சேய்நாட்டு
நந்நீத் துறையும் பொருட்பிணிக்
கூடா மையி னீடி யோரே.

என்பது: பிரிவிடை வற்புறுக்குந் தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

— மாமூலனார்

## 116. மருதம்

எரியகைந் தன்ன தாமரை யிடையிடை
யரிந்துகால் குவித்த செந்நெல் வினைஞர்
கட்கொண்டு மறுகுஞ் சாகா டளற்றுறி
னாய்கரும் படுக்கும் பாய்புன லூர
பெரிய நாணில மன்ற பொரியெனப்
புன்கவி ழகன்றுறைப் பொலிய வொண்ணுதல்

---

* "நோயிலராக நங்காதலர்" என்பது "நம்மை அறனன்றித் துறத்தலின் தீங்கு வருமென் றஞ்சி வாழ்த்தியது. நம் பொருட்டுத் தீங்கு வருமென்று நினைத்தலின் வழுவாயமைந்தது" என்றார் நச். (தொல். பொருள். 244.)

ணறுமலர்க் காண்வருங் குறும்பல் கூந்தன்
மாழை நோக்கிற் காழின் வனமுலை
யெஃகுடை யெழினலத் தொருத்தியொடு நெருநை
வைகுபுன லயர்ந்தனை யென்ப வதுவே
பொய்புறம் பொதிந்தியாங் கரப்பவுங் கையிகந்
தலரா கின்றாற் றானே மலர்தார்
மையணி யானை மறப்போர்ச் செழியன்
பொய்யா விழவிற் கூடற் பறந்தலை
யுடனியைந் தெழுந்த விருபெரு வேந்தர்
கடன்மருள் பெரும்படை கலங்கத் தாக்கி
யிரங்கிசை முரச மொழியப் பரந்தவ
ரோடுபுறங் கண்ட ஞான்றை
யாடுகொள் வியன்களத் தார்ப்பினும் பெரிதே. *

என்பது : தோழி தலைமகனை வாயின் மறுத்தது.

— பரணர்

பி - ம். 7. கூழை. 9. நெருநல். 11. யான்கரப்பவுங் கைகடந். 13. *க்கடுந்தேர்ப்.

## 117 பாலை

மௌவலொடு மலர்ந்த மாக்குர னொச்சியு
மவ்வரி யல்கு லாயமு முள்ளா
ளேதிலன் பொய்ம்மொழி நம்பி யேர்வினை
வளங்கெழு திருநகர் புலம்பப் போகி
வெருவரு கவலை யாங்க ணருள்வரக்
கருங்கா லோமை யேறி வெண்டலைப்
பருந்துபெடை பயிரும் பாழ்நாட் டாங்கட்
பொலந்தொடி தெளிர்ப்ப வீசிச் சேவடிச்
சிலம்புநக வியலிச் சென்றவென் மகட்கே
சாந்துளர் வண்ணர்குரல் வாரி வகைவகுத்

* "இதனுள் 'நாணிலை மன்ற' எனத் தோழி கூறி 'அலராகின்றால்' என வெளிப்படக் கிளத்தலின் வழுவா யமைந்தது" என்றும், "எஃகுடை.........றானே எனத் தலைவி பிறர் அலர் கூறியவழிக் காமஞ் சிறந்து புலந்தவாறு காண்க" என்றும் கூறுவர் நச். (தொல். பொருள். 241, 164.)

தியான்போது துணைப்பத் தகர மண்ணு
டன்னோ ரன்ன தகைவெங் காதலன்
வெறிகமழ் பன்மலர் புனையப் பின்னுவிடச்
சிறுபுறம் புதைய நெறிபுதாழ்ந் தனகொ
னெடுங்கான் மாஅத் தூழுறு வெண்பழங்
கொடுந்தாள் யாமை பார்ப்பொடு கவரும்
பொய்கை சூழ்ந்த பொய்யா யாணர்
வாணன் சிறுகுடி வடாஅது
தீநீர்க் கான்யாற் றவிரறல் போன்றே.

என்பது: மகட் போக்கிய செவிலித்தாய் சொல்லியது.

பி-ம். 10. வண்குடல். 18. ப்பண்ணன்.

## 118. குறிஞ்சி

கறங்குவெள் ளருவி பிறங்குமலைக் கவாஅற்
றேங்கம ழிணர வேங்கை சூடித்
தொண்டகப் பறைச்சீர் பெண்டிரொடு விரைஇ
மறுகிற் றூங்குஞ் சிறுகுடிப் பாக்கத்
தியன்முரு கொப்பினை வயநாய் பிற்படப்
பகல்வரிற் கவ்வை யஞ்சுதி மிகல்கொள
விரும்பிடி கன்றொடு விரைஇய கயவாய்ப்
பெருங்கை யானைக் கோட்பிழைத் திரீஇய
வடிபுலி வழங்கு மாரிரு ணடுநாட்
டனியை வருத லதனினு மஞ்சுது
மென்னு குவள்கொ ளாயே பன்னாட்
புணர்குறி செய்த புலர்குர லேனற்
கிளிகடி பாடலு மொழிந்தன
ளளிய டானின் னளியல திலளே.

என்பது: செறிப்பறிவுறீஇ* யிரவும்பகலும் வாரலென்று வரைவுகடாயது.†

— கபிலர்.

பி-ம். 5. இகன்முருகு. 6. யஞ்சுது.

* "இது பகல்வார லென்றது. (தொல். பொருள். 210.)
† இத்துறைக்கே கொள்வர் நக்கீரர். (இறை. களவி. 30.)

## 119. பாலை

நுதலுந் தோளுந் திதலை யல்குலும்
வண்ணமும் வனப்பும் வரியும் வாட
வருந்துவ ளிவளெனத் திருந்துபு நோக்கி
வரைவுநன் றென்னா தகலினு மவர்வறி
தாறுசென் மாக்க ளறுத்த பிரண்டை
யேறுபெறு பாம்பின் பைந்துணி கடுப்ப
நெறியயற் றிரங்கு மத்தம் வெறிகொள
வுமண்சாத் திறந்த வொழிகல னடுப்பி
னுண்சிலை மழவ நன்புழுக் கயருஞ்
சுரன்வழக் கற்ற தென்னா துரஞ்சிறந்து
நெய்த லுருவி னேதிலங் ககலிலைத்
தொடையமை பீலிப் பொலிந்த கடிகை
மடையமை திண்சுரை மரக்காழ் வேலொடு
தனியம ரழுவந் தம்மொடு துணைப்பத்
துணிகுவர் கொல்லோ தாமே துனிகொள
மறப்புலி யுழந்த வசிபடு சென்னி
யுறுநோய் வருத்தமொ டுணீஇய மண்டிப்
படிமுழ மூன்றிய நெடுநல் யானை
கைதோய்த் துயிர்க்கும் வறுஞ்சுனை
மைதோய் சிமைய மலைமுத லாறே.

என்பது: செலவுணர்த்திய தோழிக்குத் தலைமகள் சொற்றது. தோழி தலைமகட்குச் சொற்றதூஉமாம்.

— குடவாயிற் கீரத்தனார்.

பி-ம். 6. வேறு பெறு. 7. நெறியவற். 8. உமண்சாக்கொண்ட. 11. நெய்யகலுருவி. 15. துனிகொள்பு. 16. வரிபடு.

## 120. நெய்தல்

நெடுவேண் மார்பி னாரம் போலச்
செவ்வாய் வானந் தீண்டிமீ னருந்தும்
பைங்காற் கொக்கி னிரைபறை யுகப்ப

வெல்லை பைப்பயக் கழிப்பிக் குடவயிற்
கல்சேர்ந் தன்றே பல்கதிர் ஞாயிறு
மதரெழின் மழைக்கண் கலுழ விவளே
பெருநா ணணிந்த சிறுமென் சாயன்
மாணலஞ் சிதைய வேங்கி யானு
தழறொடங் கினளே பெரும வதனாற்
கழிச்சுறு வெறிந்த புட்டா ளத்திரி
நெடுநீ ரிருங்கழிப் பரிமெலிந் தசைஇ
வல்வில் லிளைய ரொடெல்லிச் செல்லாது
சேர்ந்தனை செலினே சிதைகுவ துண்டோ
பெண்ணை யோங்கிய வெண்மணற் படப்பை
யன்றி லகவு மாங்கட்
சிறுகுர னெய்தலெம் பெருங்கழி நாட்டே. *

என்பது : தோழி பகற்குறிக்கட் டலைமகளை யிடத்துய்த்து வந்து தலைமகனை யெதிர்ப்பட்டு நின்று சொல்லியது.

— நக்கீரனார்.

பி - ம். 11. கடுநீ.

களிற்றியானைநிரை முற்றும்



* இப் "பாட்டுப் பகற்குறிக்கண் இடத்துய்த்துத் தலைவனை எதிர்ப்பட்டு உரைத்தது" என்றும், "நெய்தற்கு எற்பாடு வந்தது" என்றும், "வல்வில்.........நாட்டே" என்பது களவு அறிவுறு மென்றஞ்சாது வருகவென்றலின் வழுவேனும் தலைவி வருத்தம்பற்றிக் கூறலின் அமைத்தார் என்றும், "இளையரோடு வந்து தனித்துக் கூடுதலும் கொள்க" என்றுங் கூறி, அதற்கு "வல்வில்.........துண்டோ" என்ற அடிகளை உதாரணங் காட்டியும், தலைவன்பிறவும் ஊர்தற்குக், "கழிச்சுறுவெறிந்த புட்டாளத்திரி.........தசைஇ" என்றதனைச் சான்று காட்டியுஞ் செல்வர். நச். (தொல். பொருள். 8., 210., 212.)

ஶ்ரீ:

# குறிப்புரை

## 91. பாலை.

எல்லாப் பொருளும் விளங்குதற்குக் காரணமான பகலைச் செய்த பலவாகிய கதிரையுடைய ஞாயிறு வளம்பொருந்திய பெரிய மலையின் பயன் கெடுமாறு காய்தலினாலே, அருவி இல்லையான பெரிய வரையின் மருங்கிலே தெய்வங்க ளுறைதற்கிடனாகிய சுனையைத் துழவி, ஆண்டு நீராகிய பயனைக் காணாது, பாசியைத் தின்ற பசிய கண்ணையுடைய ஆண் யானையானது ஓய்வினைத் தரும் பசியையுடைய பிடியுடனே ஒருபுறத்தே ஒடுங்கியிருக்க, மூங்கில்கள் கணுத் தெறித்துக் கெட்ட வெயில் விட்டு விளங்குகின்ற அகன்ற பாலை நிலப் பரப்பிலே அரிய பொருளை ஈட்டும் வேட்கையினால் நம் தலைவர் அகன்றுள்ளாராயினும், நின்மாட்டு மிகப் பெரிய காதலுடையராய், குட நாடு பெறினும், மடப்பம் பொருந்திய மான் போலும் பார்வையினை யுடையாய்! தோழீ! நினது மாட்சிமைப்பட்ட நலத்தினை மறந்து தங்கலர் என்று பிரிவிடை மெலிந்த தலைமகளைத் தோழி வற்புறுத்தினாள் என்க.

இரு கேழ் இரலை சேக்கும் பரல் உயர் பதுக்கை - கரிய நிற முடைய இரலை மான் உறங்கும் பரலுயர்ந்த பெரிய கற்குவியலின் கண்ணே; கடுங்கண் மழவர் களவு உழவு எழுந்த நெடுங்கால் ஆசினி ஒடுங்காட்டு உம்பர் - அஞ்சாமையையுடைய மழ நாட்டார் ஆக்களைக் களவிடலாகிய உழவினால் வளர்ந்த நெடிய காலையுடைய ஈரப்பலாவை யுடைய ஒடுங்காடு என்னும் ஊருக்கு அப்பாலுள்ள; விசி பிணி முழவின் குட்டுவன் காப்ப - இறுக்கிப் பிணித்த முழவினையுடைய குட்டுவன் காத்தலினாலே; பசி எனா அறியா பணை பயில் இருக்கை - குடிகள் பசி என்று சொல்ல அறியாத மருதம் பயின்ற ஊர்களையுடைய; குட நாடு பெறினும் (தவிரலர்) - குட நாட்டைப் பெற்றாராயினும் ஆண்டுத் தங்கலர் என்க.

தட மருப்பு எருமை தாமரை முனையின் முடம் முதிர் பலவின் கொழு நிழல் வதியும் (குட நாடு) - வளைந்த கொம்பினையுடைய எருமை தான் மேய்ந்த தாமரையை வெறுக்குமாயின், முடத்தன்மை மிக்க பலாவின் கொழுவிய நிழலிலே தங்கும் குடநாடு என்க.

மான் நோக்கி! தோழீ! பேரன்பினர் நனந்தலைப் பொருள் வேட்கையின் அகன்றனராயினும் குட நாடு பெறினும் நின் நலம் மறந்து தவிரலர் என்று இயைக்க.

பழனம் பயில் இருக்கைக் கண்ணேயுள்ள எருமை தாமரை முனையின் பலாவின் நிழல் வதியும் குட நாடு என்க.

சுனையிடத்துச் சூர் உறையுமென்றல் மரபு. சூர் - தெய்வம்; அச்சமும் ஆம்.

ஆன்ற - இல்லையான. பதுக்கை - கற்குவியல். பழனம் - மருதநிலம். தவிர்தல் - தங்குதல்.

பசியோடும் நீர் வேட்கையோடும் வருந்திய காலத்தும் தன் பிடியை விட்டு நீங்காத யானை ஒடுங்கும் கடத்திற் சென்றவராதலால், தலைவர் உன்னை மறந்து தவிரலர் என்றாளாம்.

## 92. குறிஞ்சி.

நெடிய மலையின் சாரலிலே கண்ணொளி கெட மின்னி, மிக்க மழை பெய்த பாதிராத்திரி இருளில் யானை நடுங்கத் தாக்கி வளைந்த வரியையும் சிவந்த கண்ணையுமுடைய பெரும் புலி முழங்கும் மலைச்சாரலிலே ஐய! வாராதேகொள்; நீ வாழிய; நேரிய முன்கையையும் நெடிய மெல்லிய பருத்த தோளையுமுடைய இத்தலைவியும் யானும் நாளைத் தினையைக் காவல் செய்தலைக் கருதினேம்; ஆதலால் மந்தியும் ஏறியறிய மாட்டாதவாறு மரம் பயின்ற சிறு காட்டிலே ஒள்ளிய செங்காந்தள் மலர்ந்த அவ்விடத்திலே தண்ணிய பல அருவியால் தாழ்ந்த நீருடைய ஒரு புறத்திலே இடியேறு வெகுண்டு அறைதலால் வலியழிந்த பாம்பின் சிறந்த மணி விளக்கத்திடையிலே இருண்ட மெல்லிய இவளுடைய கூந்தலிடத்து இன்பமுறுகின்ற துயிலைப் பெறுகுவை என்று இரவுக் குறிச்சென்று தலைமகளைக் கண்ணுற்று நீங்கும் தலைமகனைப் பகற்குறி நேர்ந்த வாய்பாட்டால் தோழி வரைவு கடாயினாள் என்க.

படுதல் - மிகுதல். மந்தி - ஆதித்தனுமாம்: சூரியனொளி நுழையாத வாறென்றபடி.

காந்தள் அவிழ்ந்த ஆங்கண் என்றமையால் பூப்பறிக்க வருவாராலும், அருவித் தாழ் நீர் ஒரு சிறை என்றமையால் அருவியாட வருவாராலும், பாம்பின் திருமணி விளக்கின் என்றமையால் மணி எடுக்க வருவாராலும் பகற்குறியும் அரிதென்று குறிப்பான் உணர்த்தி வரைவு கடாயினளாம்.

## 93. பாலை.

கேள் கேடு ஊன்றவும் கிளைஞர் ஆரவும் கேளல் கேளிர் கெழீஇயினர் ஒழுகவும் ஆள் வினைக்கு எதிரிய ஊக்கமொடு புகல் சிறந்து - உறவினர்களைக் கேட்டினின்றுந் தாங்கவும், கிளைஞரைப் பெருக்கவும், நொதுமலாளர்களை உறவினராய் ஒழுகச்செய்யவும வல்ல தாளாண்மைக்கு ஒத்த ஊக்கமொடு விருப்பம் மிக்கு;

ஆரம் கண்ணி அடு போர் சோழர் அறம் கெழு நல் அவை உறந்தை அன்ன பெறல் அரும் நல் கலம் எய்திய நாடும் செயல் அரும் செய் வினை முற்றினம் - ஆத்தி மாலையை உடைய அடுகின்ற போரையுடைய சோழரது அறம் நிலைபெற்ற நல்ல அவையையுடைய உறையூரைப் போலப் பெறற்கரிய நல்ல ஆபரணங்களை அடையும்பொருட்டு பலரும் ஆராயத்தக்க செய்யவரிய ஆள்வினையை முடித்தனம்; ஆயின் - ஆதலினாலே:

மா அயோளொடு நெடுநகர் மெல்பூ சேக்கை நிவந்த பள்ளி விளக்கத்து ஆகம் பூண் வடு பொறிப்ப தண் ஆன்பொருநை உயர் கரை குவைஇய மணலினும் பல முயங்குகம் சென்மோ நெஞ்சே - கரிய நிறமுடையாளோடு நெடிய மாளிகையிலே மெத்தென்ற புஷ்ப சயன முயர்ந்த பள்ளியிலே விளக்கு ஒளியிலே மார்பிலே ஆபரணங்களின் வடுப் பொறிப்பத் தண்ணிய ஆன்பொருநையாற்றின் உயர்ந்த கரையிலே குவிந்த மணலினுங்காட்டிற் பல தடவை முயங்குவோம் வா நெஞ்சே என்று, வினை முற்றி மீளலுறும் தலைமகன் இடைச்சுரத்துத் தன் நெஞ்சிற்குச் சொன்னான் என்க.

அரண் பல கடந்த முரண் கொள் தானை வாடா வேம்பின் வழுதி கூடல் நாள் அங்காடி நாறும் நறு நுதல் (மாயோள்) - அரண்கள் பல

வற்றைக் கடந்த பகைவரிடத்து மாறுபாட்டைக் கொண்ட தானையையும் வாடாத வேம்பினையுமுடைய வழுதியின் கூடலிடத்து நாட் காலையின் கண்ணுள்ள, கடைவீதியைப் போல, மணம் கமழும் நுதலினையுடைய மாயோள் என்க.

வரை குயின்ற அன்ன வான் தோய் (நெடுநகர்) - மலையைக் குடைந்தால் அன்ன வானை அளாவிய நெடிய நகர் என்க. நுரையை முகந்தால் அன்ன மெல்லிய பூ சேக்கை என்க. நலம் கேழ் ஆகம் - அழகு பொருந்திய மார்பு. இது வடுப்பொறிப்ப என்க.

வரி நுதல் யானை - வரி பொருந்திய நுதலினையுடைய யானை; வயம் திகழ்பு இமிழ் தரும் யானை - வலி திகழ்ந்ததனாலே முழங்கும் யானை; வாய் புகு கடாத்து யானை - வாயிடத்துப் புகும் கடாத்தை யுடைய யானை என்க.

மீளி மொய்ம்பொடு நிலன் எறியா குறுகி ஆள் கோள் பிழையா அஞ்சுவரு தடக்கை கடு பகட்டு யானை நெடு தேர் கோதை திருமா வியல் நகர் கருவூர் முன் துறை தெள் நீர் (ஆன் பொருநை) - மறம்பொருந்திய வலியோடு நிலத்தைப் பிளந்துகொண்டு நெருங்கி வந்து, ஆட்களைக் கொலை செய்தலிற் பிழையாத அச்சம் வருகின்ற பெரிய கையையும் மிக்க வலியையும் உடைய யானைப் படையையும் நெடிய தேர்ப்படை யையும் உடைய சேரனது செல்வத்தாற் பெரிய அகன்ற நகரமாகிய கருவூரின் முதன்மையான துறைக்கண்ணே தெளிந்த நீரையுடைய ஆன் பொருநையென்னும் யாறு என்க.

## 94. முல்லை.

தேனிறால்கள் படுகின்ற மலைச்சிகரத்தின் பக்கங்களிலே வானமானது பாதிராத்திரி இருளிலே மீனைப் பூத்தாற் போலப் பம்பிய குவிந்த இலையையுடைய முசுண்டையின் வெள்ளிய பூக்கள் குழையும் வண்ணம், யாட்டுக் குட்டிகளை ஒன்றுசேரத் தொகுத்த ஓலைப்பாயை முதுகின் புறத்தேயுடைய இடையனானவன் தண்ணிய கமழ்கின்ற முல்லை தோன்றி இவற்றோடு பிணைத்து, வண்டு ஒலிக்கும்படி தொடுத்துச் சூடிய நீர் ஒழுகுகின்ற கண்ணியனாய், மெல்லிதாகித் தேய்ந்த கொள்ளிக்கட்டை தன் அகங்கையிலே காய மிக்க இருளிலே குறுநரிகளை ஓட்டுவதற்கு ஒலிக்கின்ற நீண்ட சத்தமானது, முற்றிய

தினைப்புனத்துள்ள காவலர் சிறிய கண்ணையுடைய பன்றிகளின் பெரிய மந்தையை ஓட்டுவதற்கு 'அவை இயங்காதிற்கும் காலமிது' என்று நினைத்திருந்து ஊதும் பெரிய கொம்போசையோடு சேர்ந்து ஒன்றாக வந்து இசைக்கும் வன்புலமான காட்டுநாட்டின் கண்ணது ஆகும், அன்பு கலந்து ஆர்வம் மிக்க சாயலையும் கரிய பலவாகிய கூந்தலையும் திருந்திய இழையினையுமுடைய எனது தலைவி உறையுமூர் என்று வினைமுற்றி மீளுந் தலைமகன் தேர்ப்பாகற்குச் சொன்னான் என்க.

ஆர்வமாவது - கருதிய பொருண் மேல் தோன்றிய பற்றுள்ளம். சாயலாவது - மென்மைத்தன்மை.

தலைவனே! நின் தலைவி யாண்டுறைகின்றாள் என்று வினவிய பாகற்குத் தலைமகன் சொன்னான் என்க. இத்துறையாயின் இப்பாடலைக் குறிஞ்சித் திணைப் பாடலாகக் கொள்ள வேண்டும். 'நறுமுல்லை நான்காக நாட்டி' என்றும், 'நான்கு நெறி முல்லை' என்றும், "நாலு நளி முல்லை" என்றும் கூறுவதனால் தொண்ணூற்று நான்காம் பாடலாகிய இதனுக்கு முல்லைத் திணைக்குரிய உரிப்பொருளால் உரை கூறுவது தலைமையுடைத்து. நரியை ஓட்டும் இடையர் விளியும், பன்றியை ஓட்டும் கானவர் கோட்டோசையும் ஒருங்குவந்து இசைக்கும் என்று கூறினமையால், இப்பாடல் முல்லையும் குறிஞ்சியும் மயங்கிய திணை மயக்கம் கூறும் செய்யுளாக அமைந்திருத்தல் கொண்டு, பிற்கூறிய துறையும் பொருந்துமென்க.

இத்தன்மையெல்லாம் அமைந்த திருந்திழை ஊர் காட்டு நாட்டதென்று இயைக்க.

முசுண்டைப் பூவை முல்லை தோன்றி இவற்றொடு விரைஇக் குழையத் தொடுத்த கண்ணியனென்று கூட்டுக.

சிமையப் பாங்கர்ப் பாறைட் கங்குல் வான் பூத்தன்னவாகப் பம்பிய முசுண்டை வெண்பூவென்று இயையும்.

## 95. பாலை.

மெல்ல மெல்லப் பசந்த என் நுதலும், நுணுகி மெல்லிதாகின்ற தளிரை ஒத்த மேனியும், பலரும் அறியும்படி விளங்குகின்ற துயரமும் என் உயிரைக் கொண்டு நீங்கினலல்லது நினையின் வேறு என் செய்ய

வல்லன? தோழி! நீ வாழி; ஐதாகின்றென் என்புழி அகரம் தொகுத்தது.

பொரிந்த தாளினையும் பொகுட்டுடைய அரையினையுமுடைய இருப்பையின் குவிந்த குலையினின்றும் கழன்ற ஆலங்கட்டியை ஒத்தன வான, உட்டுளையுடைய திரண்ட பூக்களை, வழிமேற் செல்லும் அன்னியர் நீண்ட அவ்வழியிலே செல்லாது தவிருமாறு, குட்டிகளை ஈன்ற கரடியின் பெருங்கூட்டம் கவர்கின்ற சுரங்கள் பலவற்றைக் கடந்து சென்ற தலைவர்க்கு இரங்குவர் என்றுராய், இவ்வூரிலுள்ள நரகப் பெண்டிர்கள் அலர் தூற்றுவதை விரும்புவாராகி இன்னுவாகக் கூறுகின்ற சொற்கள் என் மகளுக்கு உயர்வான அல்லவெனக் முருகனைப் பரவி, நம் நிலையை உணர்ந்து, அடங்கிய கோட்பாட்டினையுடைய அன்னை முன்னர் நாம் இந்நிலையின்கட்படுதல் எவ்வாறுகும்! ஆதலால், தலைமகனுடன் போதலே அமையும் என்று, போக்குடன்பட்ட தலைமகள் தோழிக்குச் சொன்னுள் என்க.

நிரையப் பெண்டிர் - நிரையத்து வாழும் பெண்டிர்; நிரையம் புகுதற்குரியராய பெண்டிர் என்றலுமாம். நுதலும் பசந்தது, மேனியும் ஐதாயிற்று, அவலமும் நிகழ் தரும்; இவை உயிர் கொடு போனுலல்லது தீராது எனலுமாம்.

## 96. மருதம்.

கள்ளுண்ணும் மண்டை கழுவப்படுதலினுலே, அந்நீரைப் பருகிய இறவு செருக்குற்று நாண் வலித்தலினுலே பூட்டற்ற விற்போல நெற் கூட்டிடங்களிற் றுள்ளும் வயல்களையுடைய; ஊரனே! (- மருத நிலத் தலைவனே!) யென்க.

பொய்கையை அடுத்த கரையிலேயுள்ள பிரம்பினது அரத்தின் வாயன்ன ஐதான முள்ளையுடைய நெடிய கொடியால் அருவிக்கரைக்கண் ணுள்ள ஆம்பலின் அகன்ற இலை பிணிக்கப்பட்டுத் தங்கித் தங்கி வரும் வாடைக் காற்றுல் அசைக்கப்படுதலினுலே கொல்லன் ஊதும் உலை யிலே விசைகொண்டு இழுக்கும் துருத்திபோல ஒருகால் பருப்பதும் ஒருகால் நெகிழ்வதுமாயுள்ள, ஊரனே யென்க.

வயல்களையடுத்த தோட்டத்திற் காஞ்சி மரங்களையுடைய, ஊரனே யென்க. கழனி சூழ்ந்த படப்பை என்றலுமாம்.

ஒள்ளிய தொடியையுடைய பரத்தையர் கூட்டத்திலுள்ளே ஓரிளம் பரத்தையை விரும்பிக் காமக்கிழத்தியாகக் கொண்டனை என்றுநின் றூர்கள்; அச்செய்தியானது;

பருவூர்ப் பறந்தலை இருபெரு வேந்தரும் பொருது களத்து ஒழிய சோழர் அமர் கடந்த ஞான்றை களிறு கவர் கம்பலை போல பலர் வாய்ப் பட்டு அலராகின்றது - பருவூர்ப் போர்க்களத்தின்கண் சேர பாண்டிய ரென்னும் இரண்டு பெரிய வேந்தரும் பொருது களத்தின்கண்ணே பட்டொழியச் சோழர் போரை வென்ற அன்றைக்கு அவர் களிறுகளைக் கவர்கின்ற ஆரவாரம் போலப் பலர் வாயிலும் பட்டு அலராகின்றது என்று, தோழி தலைமகற்கு வாயின் மறுத்தாள் என்க.

செம்பொன் சிலம்பின் செறிந்த குறங்கின் அம் கலுழ் மாமை அஞதை தந்தை (சோழர்) - செம்பொற் சிலம்பினையும் செறிந்த தூடையினையும் அழகு ஒழுகுகின்ற மாமை நிறத்தினையுமுடைய அஞதை என் பாளுக்குத் தந்தையான சோழர் என்க.

அண்ணல் யானை அடுபோர்ச் சோழர் - தலைமை பொருந்திய யானைப் படையால், அடுகின்ற போரையுடைய சோழர் என்க.

வெண்ணெல் வைப்பிற் பருவூர் - வெண்ணெல் விளையும் ஊர்கள் சூழ்ந்த பருவூர். இவ்வூர்ப் பறந்தலைக் கண்ணே என்க.

ஒளிறுவாள் நல் அமர் - விளங்குகின்ற வாளால் வஞ்சனையின்றிப் பொருத அமர் என்க.

படப்பைக் கான் நாறு ஊர என்ற பாடத்திற்குப் படப்பையின் மணம் கமழும் ஊர என்க.

பழன ஊர, ஞெகிழுமூர, காஞ்சியூர என்று இயைக்க.

நறவுகலந்த தூயதல்லாத நீரை நுகர்ந்த இறவு செருக்கினுல் மயங்கித் தான் உய்யமுடியாத கூட்டுமுதற்கண் தெறித்தாற்போல, மாயஞ்செய்யும் பரத்தையாகிய இழிந்த நலனை நுகர்ந்த தலைமகனும் காமத்தால் மயங்கி தான் இல்லற நடாத்தி உய்ந்துபோக முடியாத குறுமகள் முயக்கிடைத் தாழ்ந்தனன் என்றாளாம்.

## 97. பாலை.

கள்ளிக் காட்டிலேயுள்ள புள்ளிப் பொறிகளையுடைய கலைமானுடைய வறனுற்ற அழகிய கோடு உதிரும் வண்ணம் அதன் ஓடும் வெற்றியைக் கடந்து பற்றிக்கொண்டு அறைந்து தன் வலப்புறத்தே விழுந்திறக்கும்படி செய்து புலாலில் விருப்பமுடைய புலி தின்று துறந்துவிட்டுப் போன மூட்டுவாய் கழிந்த மிக்க முடைநாற்றத்தை யுடைய தசையைச் சூழ்ந்து,

இரவிலே குறும்பிலேயுள்ளார் அலறும்படி அவரை நூறி நிரையை ஆண்டிருந்து வேறு பிரித்துப் பெரிய கற்பாறையின் முடக்கத்திலே அவற்றின் தசையை அறுத்துத் தின்னும் கொலைத் தொழிலை யுடைய வில்வீரரான வெட்சியார் போல,

பெருந்தலையையுடைய எருவையோடு பருந்துகளும் பல ஒன்று சேர்ந்து வந்து கொத்திக் கொண்டிருக்கும் அருஞ்சுரத்தே கழிந்த கொடியராகிய நம் தலைவர் பொருட்டு;

வேண்மான் நன்னன் வியலூரன்ன நின் அலர்முலையாகம் புலம்ப அல்கலும் பல நினைந்து ஆழேல் என்றி தோழி - வேளிர் தலைவனை நன்னனது வியலூரைப் போலப் பரந்த நின் முலையையுடைய மார்பு தனிப்ப நாளும் பல நினைந்து ஆழாதேகொள் என்னாநின்றாய், தோழீ!

குரவு மலர்ந்து அற்சிரம் நீங்கிய அரும்பதவேனில் அறல் அவிர் வார்மணல் அகல் யாற்று அடைகரை துறை அணிமருது தொகல் கொள ஓங்கி கலிழ்தளிர் அணிந்த இருசினை மாஅத்து இணர் ததை புதுப்பூ நிரைத்த பொங்கர் புகைபுரை அம்மஞ்சு ஊர நுகர்குயில் அகவும் குரல் கேட்போர்க்கு என் கண் பனி நிறுத்தல் எளிதோ - குரவம் மலர்ந்து பனிக்காலம் நீங்கிய அரிய செவ்வியையுடைய வேனிற்காலத்திலே அற்றொழும் நீர் தோன்றுகின்ற ஒழுகிய மணலையுடைய அகன்ற யாற்றின் கரையிலேயுள்ள துறையை அலங்கரிக்கும் மருதமரங்கள் தொகுதியாக ஓங்கி, ஒழுகுந் தளிரால் அலங்கரித்துக் கொண்ட பெரிய கிளைகளையுடைய மாவினது கொத்துக் கொத்தாக நெருங்கிய புதிய பூக்கள் செறிந்த சிறிய மரக்கொம்புகளிலே புகையை ஒக்கும் அழகிய மேகம் தவழ, இவ்வின்பத்தை நுகர்கின்ற குயில்கள் பாட, அதன் குரலை மகிழ்ந்து கேட்போர் பொருட்டு என் கண் நீரைச்

சொரியாது நிறுத்துதல் எளிதோ என்று, வற்புறுக்கும் தோழிக்குத் தலைமகள் சொன்னாள் என்க.

இரு கழை இறும்பின் ஆய்ந்துகொண்டு அறுத்த நுணங்கு கண் சிறு கோல் வணங்கு இறை மகளிரொடு அகவுநர் புரந்த அன்பின் கழல் தொடி நறவுமகிழ் இருக்கை நன்னன் வேண்மான் - பெரிய மூங்கில் வளர்ந்த குறுங்காட்டில் இலக்கணம் ஆராய்ந்து அறுத்துத் திருத்திக்கொண்ட நுணங்கிய கணுவையுடைய சிறிய கோலைப் பிடித்த வளைந்த முன்கையை யுடைய கூத்தியரொடு பாடகர்களையும் காத்த அன்பினையும் உழலும் தொடியினையும் நறவு உண்டு மகிழ்ந்திருக்கும் இருக்கையினையுமுடைய நன்னன் வேண்மான் என்க.

தலைமைக் கூத்தியர் கையிற்கொண்ட மூங்கிற்கோற்குத் தலைக்கோ லென்று பெயர். அதன் இலக்கணத்தைச் சிலப்பதிகாரம் அரங்கேற்று காதையுட் காண்க. இறும்பு, ஈண்டு மாற்றார் எயிற் புறத்து மிளை.

வேனிற்காலத்துச் செவ்வியைப் பிறரெல்லாம் நுகரத் தான் மாத் திரம் நுகரமாட்டாத நிலையிலுள்ளாளாதலால், தலைவி 'என் கண்பனி நிறுத்தல் எளிதோ' வென்று ளென்க.

நுகர் குயில் அகவும் குரல் கேட்போர்க்கு - நுகருகின்ற குயில் தன் பேடையை அழைக்கின்ற குரலைக் கேட்போர் பொருட்டு என்றலு மாம்; அகவுதல் - அழைத்தல்.

எருவை - பருந்தின் விசேடம். இது வெள்ளிய தலையையுடையது. யாழ, அசை. கலைமானின் கடுமுடையைச் சூழ்ந்து எருவையும் பருந்தும் வந்து இருக்கும் சுரம் என்றியைக்க. கொலைவில் ஆடவர் எருவைக்கும் பருந்திற்கும் உவமை.

## 98. குறிஞ்சி.

குளிர்ச்சி பொருந்திய மலையினது உயர்ந்த வளங்கெழுமிய சார லிடத்து வெறுப்பில்லாத கோட்பாட்டுடனே நம் தலைவர் நமக்கு உவந்த இனிய உள்ளம் இன்னுவாயினமையாலே, வெறுக்கும்படியாக வந்த நீல்கல் வருத்தமானது தெய்வங்கள் உறைகின்ற வெற்பனது மார்பினை நாம் பொருந்துதலாலே தணிதலை அன்னை அறியாளாய், நீண்ட கோற் றொழிலமைந்த செறிந்து தோன்றுகின்ற இலக்கம் அமைந்த நம் வளை

நெகிழ்ந்தமையை நோக்கிச் செயலற்ற மனத்தினளாய் அறிவு வாய்த்த பொய்கூறுதல் வல்ல கட்டுவிச்சியரை அதன் காரணம் வினவுதலினாலே,

அப்பெண்டிர் பிரப்பினைக் குலுக்கிப் போகட்டு, 'இது முருகனால் உண்டான தீர்தற்கு அரிய நோய்' என்று கட்டுக் கூறுதலின், அதனை மெய்யென்று கருதி,

சித்திரம்போன்ற தொழில் புனைந்த நல்ல மாளிகையிலே 'பாவை போலும் பலராலும் ஆராயத்தக்க மாட்சிமைப்பட்ட அழகானது என் மகட்குப் பண்டையிற்போலச் சிறந்திடுக' எனத் தெய்வத்தைப் பராவி,

கூட்டங்கொண்ட இனிய வாச்சியங்கள் ஒலிக்க வெறியாடுங் களனை இழைத்து, அவ்வாட்டத்திற் கேற்ற அலங்காரத்தைச் செய்த அகன்ற பெரிய பந்தலிலே வெளிய பனங்தோட்டினைக் கடம்பு மலரொடு சூடி, இனிய சீரை மெல்லிதாக அமைந்த பாணியிற் பொருத்திக் கையை வீசினவனாய், குமரக்கடவுளின் பெரும் கீர்த்தியைப் புகழ்ந்து வேலனாவன், வெறியாடுகின்ற பெரிய களம் அழகுறும்படி, பொறி யமைக்க வல்லவன் அமைத்த சூத்திரப்பாவை போல, ஆடலை வேண்டின் தோழீ! என் ஆகுமோ! பாணி - தாளம்; சீர் - தாள அறுதி. 'மார்புறத் தணித்தல்' என்னும் பாட்டிற்கு மார்பினை, நம்மோடு உறுவித்துத் தணித்தல் என்க. ஆடணி - தொங்கலலங்காரம் என்றலுமாம்.

வெறியயர் களத்து வந்து கூடியுள்ள மயக்கங் கொண்ட கட்டுவிச்சிகளின்பொருட்டு விரைவாக வேலன் ஆடிய பின்னும் என் வாடியமேனி பண்டையிற்போலச் சிறவாதாயின், யாம் மறைந்து ஒழுகிய இக்களவொழுக்கம் அலராகாமை அரிதாகும்; மயங்குதல் - கூடுதல்.

அப்படியன்றி, நம் தலைவர் உறுவித்த இவ்வல்லலைக் கண்டு அருளி நெடுவேள் நம் பண்டை யழகை நல்குவனேயானால், சாரைக் கெழுமிய நாடனாகிய நம் தலைவர் 'செறிந்த தொடியினையுடைய நம் தலைவி உற்ற துன்பமும் நல்கலெவ்வம் அன்றிப் பிறிதுபோலும்' என்று கேட்பாராயின் யான் உயிர்வாழ்தல் அதனினுங் காட்டில் அரிது என்று, தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழி தலைமகட்குச் சொல்லுவாளாய்ச் சொன்னாள் என்க. தலைமகள் தோழிக்கு இவ்வாறு சொன்னாள் என்றலுமாம்.

நல்கல் எவ்வமாவது - மார்பு நல்கியதாலாகிய எவ்வம். எவ்வம் - வருத்தம். வெண்போழ் - ஆகுபெயராற் பனங்தோட்டிற்காயிற்று.

வேலன் - பூசாரி; "செவ்வேள் வேலைத்தான் ஏந்தி நிற்றலின் வேலன் என்றார்." நொவ்வல் - விரைவு. மையற் பெண்டிற்கு வருத்த முண்டாகும்படி, மேனி பண்டையிற் சிறவாதாயின் எனினுமாம். நொவ்வல், ஈண்டு வருத்தம்.

செல்லலும் பிறிது செல்லலுக்கு மருந்து மார்பேயன்றிப் பிறி தொன்று என்றலுமாம். அதனிலும் - அவ்வலராகாமையினும்.

அலரச்சத்தினும் நெடுவேள் நல்கல் அச்சத்திற்குத் தலைவி மிகுதி யும் அஞ்சியது, தலைமகன் பண்டேயும் தன் பரத்தைமையால் நெகிழ்ந்து ஒழுகுவான் இன்று நம் ஆற்றாமைக்கு மருந்து பிறிதுமுண்டென்று அறியின் வரைவு நீடுமென்னும் கருத்தால் என்க

## 99. பாலை.

வாளின் வடிவு போலும் வரிமையுடைய புலியினது, இரை யைப் பற்றிய நகத்தினைப் போலும் சிவந்த மொட்டவிழ்ந்த முள்ளு முதிர்ந்த முருக்கினது வண்டுகள் உண்ட பூவாடல்கள் தாவி, கதிர்த்த அழகினையும் மாட்சிமைப்பட்ட ஆபரணத்தினையுமுடைய மகளிரது அணிபூண்ட முலைபோலும் கட்டவிழ்ந்த கோங்கு முகை யோடு தங்கவும், கொத்தான புன்லிப்பூவானது பரந்த அழகிய தண்ணிய பாதிரியின் உதிர்ந்த பூவையுடைய அழகிய சினைக்கண்ணே தாவவும், இங்ஙனம் ஒன்றோடொன்று மாறுபட்ட பூக்களை மாம்பூவோடு கலந்து பரவத்தக்க தெய்வமுறையும் கோயிலின்கண்ணே தூவுதலால் கலப்புற்ற பூவைப்போலக் கானமானது மிகுதியும் விரும்பத்தக்கதா யிராநின்றது; இன்னும் கேள்! உன் தந்தை அடுகின்ற போர்க்களத்திற் பகைவர் மதிற் கதவின்மேற் பாய்ந்ததனாற் கிம்புரி சிதைந்த மருப்பினையுடைய பிடி மிடைந்த களிறுகளைப்போலத் தோன்றா நிற்கும் குறியவும் நெடியவு மான அளவுள்ள குன்றங்களையும் உடையதா யிராநின்றது; இஃது என்ன ஆச்சரியம்! இள நங்காய்! இதனை நீ பார்; நீவாழ்க! என்று உடன் போகிய தலைமகளைத் தலைமகன் மருட்டிச் சொன்னான் என்க.

முருக்கின் செம்மல் தாஅய், கோங்கமொடு அசைஇ, அதிரல் பாதிரி சினைதாஅய், மாமலரொடு விராய், அணங்குடை நகரின் மணந்த பூவின் கானம் நன்றும் நயவரும்; தொடி சிதை மருப்பிற் பிடை மிடை களிற்றிற் றோன்றும் குறு நெடுந் துணைய குன்றமும் உடைத்து; அம்ம! குறுமகள்! கண்டிசின், வாழி என்று இயைக்க.

தான் பற்றிய இரையின் குருதியாற் சிவந்த உகிர் என்றற்குக் கோளுகிரென்றார். இவ்வுகிரானது முருக்கின் முகையவிழ்ந்த செம் மற்கு வண்ணத்தோடு வடிவுபற்றி உவமஞ் சென்றது. மகளிர் முலை போலும் முகைக் கோங்கு என்க. தொடி சிதை மருப்பிற் களிறு, பிடி யிடை களிறு என்க.

'மராஅ மலரொடு விராஅய்ப் பராஅம்' என்ற அடி அளபெடை வண்ணத்திற்குதாரணம். (தொல். பொருள். 531.)

## 100. நெய்தல்.

அரைக்கப்பெற்றுப் பிறவிரைகளோடுங் கூட்டியமைந்த சந்தனத் தைப் பூசி, உயர்வாகப் பூண்ட பூமாலையையுடைய மார்பினாய்! (தலைவ) நீ இரவிலே வந்து என் தலைவியின் நல்ல மார்பு வடுக்கொள்ளும்படியாக முயங்கி விட்டுப் பெயர்தல் எனக்கும் இனியதாக இராநின்றது; ஆனால் இக்களவொழுக்கத்தால்; கைதையம் படப்பை எம் அழுங்கலூர் புறந்தை முன்றுறை வம்ப நாரை இனன் ஒலித்தன்ன அம்பல் வாய்த்த - தாழைத் தோட்டத்தினையுடைய எம்முடைய ஆரவாரமுடைய ஊராகிய புறை யாற்றின் முதன்மையான கடற்றுறைக்கண்ணே புதிதாக வந்த நாரை யின் இனங்கள் ஒலித்தாலன்ன அம்பல் உண்டாயிற்று ஆதலால் நீ வரை வொடு புகவேண்டும் என்று தோழி தலைமகனை வரைவு கடாயினாள் என்க. அரையுற்று, சந்தன மரத்து அரையிற் பொருந்தி எனினுமாம்.

பெரு திரை முழக்கமொடு இயக்கு அவிந்திருந்த கொண்டல் இரவின் கொழுமீன் கொள்பவர் இருகடல் மடுத்த இருள் நீங்கு ஒண் சுடர் - பெரிய திரையின் முழக்கமொடு அதன் சஞ்சாரமும் ஓய்ந்திருந்த மேகஞ் சூழ்ந்த இரவிலே கொழுமீனைக் கொள்ளும் பரதவர் கரிய கடலிலே மடுத்த இருள் நீங்குதற்குக் காரணமான ஒள்ளிய விளக்க மானது; ஓடா பூட்கை வேந்தன் பாசறை ஆடு இயல் யானை அணி முகத்து அசைத்த ஓடை ஒண் சுடர் ஒப்பத் தோன்றும் (புறந்தை) - ஓடாத மேற்கோளினையுடைய வேந்தனது பாசறைக்கண்ணே ஆடு மியல்புடைய யானையின் அழகிய முகத்துப் பிணித்த ஓடையின்கண் ஒள்ளிய விளக்கம் போலத் தோன்றுநிற்கும் புறையாறு என்க.

பாடுநர் தொடுத்த கைவண் கோமான் பரி உடை நல் தேர் பெரியன் விரி இணர் புன்னை அம் கானல் புறந்தை - பாடுவார்களைத் தன்பாலே வளைத்துக் கொண்ட கைவண்மையையுடைய அரசனான குதிரை பூண்ட

தேரினையுடைய பெரியன் என்பானது விரிந்த பூங்கொத்தையுடைய புன்னையாலழகிய கடற்கரைச் சோலையையுடைய புறையாறு என்க.

மீன் கொள்பவர் கருங்கடலில் மடுத்த ஒண் சுடர் யானை ஓடையில் வைத்த ஒண் சுடர் ஒப்பத் தோன்றும் புறந்தை என்று இயைக்க. கொழுமீன், மீன்விசேடம். தொடுத்த கைவண்மை - தொடுத்தற்குக் காரணமான கைவண்மை.

புறந்தை, புறையாற்றின் மரூஉ. புறையாறு, பொறையாறு எனவும் வழங்கும். இதனைப் 'பொறையாற்றுகிழானைக் கல்லாடனார்' எனவரும் தொடர் நோக்கி அறிக. (புறம். 391) தண்புலர் வைகுறு விடியல் போகிய எருமை நெய்தல் புது மலர் மாந்தும் (கைதைப் படப்பை) - தண்ணிய இருள் புலர்கின்ற இராக்காலம் வைகிய விடியலிலே மேயப் போன எருமை நெய்தற் புதுமலரை உண்ணும் கைதைப் படப்பை என்க. படப்பை - தோட்டக்கூறு.

புலர்தல் - அகலப் போதல்; வைகுறு புலர் விடியல் - இராப்பொழுது வைகுற்ற இருள் புலர்கின்ற விடியல். ஓடை, முகபடாம்.

புல் மேயப் புறப்பட்ட எருமை தனக்கு ஊழின் பயனாற் கிடைத்த நெய்தற் புதுமலரை மாந்துதலிலேயே மகிழ்ந்து தன் காரியமான கொட்டிலுக்கு ஏகுதலை மறந்திருந்தாற் போல, வேட்டைமேற் புறப்பட்ட தலைமகனாகிய நீ நினக்கு ஊழின்பயனாற் கிடைத்த தலைவியைக் களவிற் புணர்ந்திருத்தலிலேயே மகிழ்ந்து நின் அறமான வரைவொடு புகுதலை மறந்திருந்தாய் என்று குறிப்பாற் கூறி, தோழி வரைவு கடாயினாள் என்றவாறு.

## 101. பாலை.

தோழி! கேட்பாயாக! நீ வாழி! பனி மிகுத்த பல மலைகளையும் கடந்து சென்ற நம் தலைவர்க்கு வெறுக்கத்தக்க காரியம் நாம் ஒன்றும் செய்திலேம்; அவ்வாறாக, அவர் வாராமைக்குக் காரணம் யாதோ? இம்மையில் நன்று செய்யுமிடத்துத் தீதுண்டாவதில்லை என்னும் பழைமையாக வழங்கும் பழமொழி இன்று பொய்த்தது போலும், என்று பிரிவிடை வேறுபட்ட தலைமகள் தோழிக்குச் சொன்னாள் என்க. இவ்வாறு தோழி கிழத்திக்குச் சொன்னாள் என்றலுமாம்.

யாட்டுக்கிடாயின் மருப்பினை ஒப்பச் சுற்றிக் கடை சுழன்று, பிடரியை மறைக்கின்ற தலைமயிரையும், சிவந்த கண்ணையும் உடைய மழவர் இருமல் வாராமற் றீர்க்கும் மருந்தாகிய புற்று மண்ணை வாயிலடக்கிக் கொண்டு மிக்க வலியையுடைய தீயுண்டாகின்ற சிறிய அம்பினை வில்லினோடு பிடித்து, நுரை தெறிக்கின்ற மத்தினை எடுத்துக்கொண்டு ஆன் நிரையின் புறத்துத் தம் அடியைப் புதைத்துள்ள செருப்புத் தேய ஓடி, காவலையுடைய விடத்திலேயுள்ள கன்றுகளை மிகுதியாகக் கவர்ந்தனராய், அவற்றை இனம் இனமாகக் கூட்டி வைக்கும் இடம் பரந்த பெரிய காட்டிலே; அகல் இரு விசும்பில் கூடம் போல பகல் இடை நின்ற பல் கதிர் ஞாயிறு உருப்பு அவிர்பு ஊரிய சுழன்று வரு கோடை - அகன்ற பெரிய விசும்பிலேயுள்ள சிகரம் போலப் பகலின் இடையிலே நின்ற பல கதிர்களையுடைய சூரியனது வெப்பம் விட்டு விளங்குவதனாலே நிரம்பிய சுழன்று வருகின்ற மேல் காற்றினால்; ஊழ் கழி புன் கால் முருங்கை பன் மலர் தண் கார் ஆலியில் தாவன உதிரும் பனி படு பன் மலை - வரிசையாகக் கழிந்த புல்லிய காலையுடைய முருங்கையின் பல மலர்களும் தண்ணிய கார்காலத்து ஆலங்கட்டி போல தாவி உதிரும் பனி மிகுத்த பல மலைகள் என்க. ஊரிய என்ற பாடத்திற்கு - கோடை அசைத்த என்க.

கூடம், மன்றுகச் செய்யப்பட்ட தேவகோட்டம் என்றார் பேராசிரியர். (கோவை. 129) கூடாரமெனினும் ஆம். கார் ஆலி - வெள்ளிய ஆலங்கட்டி என்றலுமாம். முருங்கை மலர் வெள்ளிய நிறமுடையதாதலால், அஃது ஆலங்கட்டிக்கு உவமை கூறப்பட்டது. 'முருங்கை நவிரல் வான்பூச் சூரலங் கடுவளி எடுப்ப ஆருற்று உடை திரைப் பிதிர்விற் பொங்கி முன், கடல் போற் றோன்றல காடு' (அகம். 1) என்பதனாலும், 'முருங்கை வெண்பூ' (பெருங் க. 52-65, 66) என்பதனாலும் அஃது அந்நிறமுடையதாதல் அறியப்படும். மத்தம் - கள்ளுமாம்.

"மண்கொள் புற்றத்து அரும்புழைத் திறப்பின் ஆகொள் மூதூர் கள்வர் பெருமகன்" (அகம். 342) என்றமையாலும், வீரர் புற்று மண்ணைக் கைக் கொண்டு ஆநிரை கவர்தல் உணரப்படும்.

## 102. குறிஞ்சி.

உளைமானாகிய சிங்கத்தின் வலியினோடு, தினையின் பெரிய புனத்திலே ஓங்கிய பரணிலே, கானவன் மதுவை யுண்டு மகிழ்ந்து

உறைந்தானாக, பூசிய சாந்தினையுடைய பரந்த கரிய தன் அளகத்தினை மெல்லிதாக வருதலோடு மடிந்து வீசும் காற்று ஆற்ற, கொடிச்சியானவள் தழைத்து நீண்ட மயிரினைக் கைபெயராது கோதினளாய்ப் பெரிய வரையின் மருங்கிலே குறிஞ்சிப் பண்ணைப் பாட, ஆண்மையை விரும்பும் இளங்களிறு தான் கவர்ந்த தினைக் கதிரினை உட்கொள்ளாமலும், நின்ற நிலையினின்றும் பெயராமலும் உறங்காத பசிய தனது கண் உறங்கும் தன்மையைப் பெற்று விரைய உறங்கும் நாடனான தலைவன் ஆரம் பொருந்திய தன் மார்பிலே அழகிய வண்டு ஒலிப்ப, மாலையனாகவும் கண்ணியனாகவும் வலக்கையிலே வேல் ஏந்தினவனாகவும் வந்து, காவலர் அறிதலைப் பரிகரித்துத் தாள் விழுத்தாத கதவின் மருங்கே தங்கினவனாய் மெல்ல உட்புகுந்து, வருந்தும் துன்பத்தையுடைய என் மார்பினை முயங்கித் தோளினைப் புணர்ந்து, இனிய சொல்லைக் கலந்து பேசி விட்டுப் போனான், தோழீ! அவ்வாறிருக்க, அவன் இன்று அருளாமையால் பேரலராகவே, அழகிய கருமை சூழ்ந்த ஓதியையடுத்த என் ஒள்ளிய நுதலிடத்து இன்று பசப்பினைக் கண்டோமே! அஃது என்? என்று, இரவுக்குறிக்கட் சிறைப்புறமாகத் தோழிக்குச் சொல்லுவாளாய்த் தலைமகள் சொன்னாள் என்க.

உளை-பிடரின் மயிர். அதனை உடைய விலங்கு ஆயது சிங்கம். அரி-அழகு, இரேகையுமாம். தார், அழகினுக்கிடும் மாலை. கண்ணி, போர்ப்பூ. மற்று, வினைமாற்றின்கண் வந்தது. ஊர்தல் - நிரம்புதலுமாம்.

'இரவுக்குறியே இல்லகத்துள்ளும், மனையோர் கிளவி கேட்கும் வழியதுவே, மனையகம் புகாஅக் காலை யான' என்ற சூத்திரத்தின்கண் இது மனையகம் புக்குப் புணர்ந்தது என்றும், இப்புணர்ச்சி தலைவி புறத்துப் போகின்றாளெனச் செவிலிக்கு ஓர் ஐயம் நிகழ்ந்தவழிப் பின்னர் மனையகத்து நிகழும் என்றும் கொள்வர் நச். (தொல். பொருள். 131.)

## 103. பாலை.

நிழல் அறு நன தலை எழில் ஏறு குறித்த கதிர்த்த சென்னி நுணங்கு
செம் நாவின் விதிர்த்த போலும் அ நுண் பல் பொறி காமர் சேவல்
ஏமம் செப்ப முளி அரில் புலம்ப போகி முரம்பு அடைந்திருந்த முனாஅது
மூரி மன்றத்து அதர் பார்த்து அல்கும் ஆகெழு சிறு குடி உறையுநர்
போகிய ஓங்கு நிலை வியன் மனை இறை நிழல் ஒரு சிறை புலம்பு அயா
உயிர்க்கும் வெம்முனை அருசுரம் நீந்தி தம் வயில் ஈண்டு வினை மருங்கின்

நாம் நயந்திசினோர் மீண்டோர் மன் என நள் என் யாமத்து உயவுத் துணையாகிய நலனும் நம்மொடு பசலை நோன்று தம்மொடு தானே சென்ற நல்கார் கொல்லோ - நிழலற்ற அகன்ற விடத்திலே அழகிய எறு என்பத னைக் குறியாநின்ற கதிர்த்த தலையையும் நுணுகிய சிவந்த நாவினையும் சிதறினாற் போலும் ஐயவான நுண்ணிய பல புள்ளிகளையும் விரும்பப் படும் தன்மையினையுமுடைய சேவல் எமத்தினைச் செப்பினமையாலே, தாம் கிடந்த காய்ந்த தூறு தனித்தொழியப் போய் வன்னிலத்தினைச் சார்ந் திருந்த பழையதான பெரிய அம்பலத்திலே வழியைப் பார்த்துக்கொண்டு தங்கியிருக்கும் ஆக்கள் கெழுமிய சிறுகுடிக்கண்ணே வசிப்போர் துறந்து விட்டுப் போன ஓங்கிய நிலையை உடைய பெரிய மனையின் இறப்பு நிழலின் ஒரு புறத்தே தனிமையால் நெட்டுயிர்த்தற்கு ஏதுவான கொடிய போர் முனையாகிய கடத்தற்கரிய சுரத்தைக் கடந்து தம்மிடத்திலே ஈண்டிய வினையின் பக்கத்து நாம் விரும்பிய நம் தலைவர் மீண்டுமேகினோர் என்று; 'நள்' என்னும் அநுகரண ஒலியுடைய நடு யாமத்திலே நமக்கு உசாத் துணையாயிருந்த நம் நலனும் இதுகாறும் நம்மொடு பசலையைப் பொறுத்து அவர் மீளாரென்பதனாலே அவர் தம்மொடு தானே வலியச் சென்றன. இனி நம் தலைவர் அருளார் போலும்! என்று, தலைமகன் பிரிவின்கண் தலைமகள் தோழிக்குச் சொன்னாள் என்க. மன், கழிவின் கண் வந்தது.

சென்னி நா, பொறி, சேவற்கு அடைகள். எழிலேறு என்பதற்கு, எழிலையுடைய ஆனேறு என்று கொண்டு, அஃது அரில் புலம்பப் போகிச் சிறுகுடிக்கண் மனையின் இறை நிழல் ஒரு சிறைப் புலம்பயா வுயிர்க்கும் என்றியைத்துப் பொருள் கோடலுமாம். உயவுத் துணையாக என்னும் பாடத்திற்கு உயவுத் துணையாக நோன்று என்று இயைத்துப் பொருளுரைக்க.

## 104. முல்லை.

வேந்து வினைமுடித்தகாலை இனம் வண்டு தேம் பாய்ந்து ஆர்க்கும் தண் நறு புறவின் வென்வேல் இளையர் இன்புற வலவன் வள்பு வலித்து ஊரின் அல்லது முள்ளுறின் முந்நீர் மண்டிலம் ஆதி ஆற்றுகடும் நால் நல் பரிபூண்ட நெடுதேர் வாங்குசினை பொலிய ஏறி - அரசன் வினையை முடித்த காலத்துப் பெடையுடன் கூடிய வண்டு திசைகள் தோறும் பாய்ந்து ஆரவாரியாநின்ற தண்ணிய நறிய முல்லை நிலத்தில் வெற்றி வேலையுடைய தேரிளையர் மகிழுமாறு பாகன் கடிவாள வாரை வலித்து

ஊரின் அல்லது, தாற்று முள்ளால் ஊன்றின் மூன்றன தன்மையை யுடைய மண்டிலங்களும் தன் ஆதி என்னும் நேரோட்டத்திற்கு இடம் பற்றாத நல்ல நான்கு குதிரைகள் பூண்ட விரைந்த செலவினையுடைய பெருந்தேரின் வளைந்த கொடிஞ்சி பொலிய ஏறி ; சிறு ஊர் பல பிறக்கு ஒழிய - சிறிய ஊர்கள் பல பின்னொழிய ; பனி வார் கண்ணள் பல புலந்து உறையும் ஆய் தொடி அரிவை அணிய கூந்தல் குரல் போது மாலை வேய்ந்தோய் - நீர் ஒழுகும் கண்ணளாய் பல சொல்லி வெறுத்து இல்லிலே உறையும் ஆராய்ந்த தொடியையுடைய தலைவி அணியுமாறு அவள் கூந்தலிடத்துக் கொத்தான போதினை மாலைக் காலத்து வந்து சூட்டினாய் ; அதனால், இனிது செய்தனையால் எந்தை வாழிய - இனியதனைச் செய்தாயானாய் ; எந்தாய் நீ வாழ்க ! என்று வினைமுற்றி மீளுந் தலைமகற்குத் தோழி சொன்னாள் என்க.

நால்கு, நான்கு குதிரைகட்கு ஆகு பெயர்.

புதல பூ கொடி அவரை பொய் அதள் அன்ன உள் இல் வயிற்ற வெள்ளை வெண் மறி மாழ்கி அன்ன தாழ் பெரு செவிய புன் தலை சிறாரோடு உகளி மன்று உழை கவை இலை ஆரின் அம் குழை கறிக்கும் (சீறூர்) - புதலிடத்துப் படர்ந்த பூவையுடைய கொடியின்கட் காய்த்த அவரையின் பொய்த்தோல்போல உள்ளீடில்லாத வயிற்றையுடைய வெள்ளாட்டின் வெள்ளிய குட்டியானது மயங்கி விழுந்தாலன்ன தாழ்ந்த பெரிய செவியவாய்ப் புல்லிய தலையையுடைய சிறாரோடு கூடித் துள்ளிக் கொண்டு சென்று, அம்பலத்தின் புறத்துள்ள கவை பொருந்திய இலையை யுடைய ஆத்தியின் அழகிய தளிரைக் கடியாநின்ற சிறிய ஊர்கள் என்க.

வினை முடித்த காலை இளையர் இன்புற வலவன் வள்பு வலித்து ஊரின் அல்லது முள்ளுறின் மண்டிலம் ஆதி ஆற்றாப் பரித் தேர் ஏறி சீறூர் பல பிறக்கொழிய மாலை வந்து அரிவை கூந்தல் போது வேய்ந்தோய்; இனிது செய்தனை எந்தை வாழிய என்று கூட்டுக.

## 105. பாலை.

• மணிசெய் மண்டை தேன்பெய்து தீம்பால் ஏந்தி ஈனுத்தாயர் மடுப்ப வும் உண்ணாள் நிழல் கயத்து அன்ன நீள் நகர் வரைப்பில் எம்முடை செல்வமும் உள்ளாள் அகல் அறை முதிர் அரும்பு மலர்ந்த வேங்கை ஒள் இலை தொடலை தைஇ நல்வரை நாடன் தன் பாராட்ட பொய்ம் மருண்டு முகைதலை திறந்த வேனில் பகைதலை மணந்த பல் அதர்ச்

செலவு மெல்லென யாங்கு வல்லுநள் கொல் - நவமணிகளிழைத்துச் செய்த மண்டையில் தேனைச் சொரிந்து தீவிய பாலோடு கலந்து ஏந்தி வந்து செவிலிமார் ஊட்டவும் உண்ணாளாகிய என் மகள் நிழலின் கீழே யமைந்த சுனைபோலத் தண்ணென்னும் நெடிய மாளிகையின் எல்லையிலேயுள்ள எம்முடைய பெருஞ் செல்வத்தையுங் கருதாது, அகன்ற பக்கமலையிலே முதிர்ந்த அரும்பு மலர்ந்த வேங்கையின் ஒள்ளிய பச்சிலை மாலையைச் சூடி நல்ல மலைநாடனாகிய தலைமகனானவன் தன்னைப் பாராட்ட, அப்பொய்யை மெய்யென்று மருண்டு, மலைக்குகையின் தலை வெடித்துத் திறந்துள்ள வேனிற்காலத்தே பகைவர் கைகலந்து பொரும் பலவாகிய பாலைநிலவழியிலே அவனுடன்செல்லுதலை மெத்தெனவேனும் எவ்வாறு மாட்டுவளோ' என்று மகட்போக்கிய தாய் சொன்னாள் என்க.

மெல்லெனப் பாராட்ட யாங்கு வல்லுநள் என்றியைத்தலுமாம்.

பந்து புடைப்பு அன்ன பாணி - பந்தின் புடைத்தலை ஒத்த தாளத்தினையும்; பல் அடி சில் பரி குதிரை - பலவாகிய அடி வைப்பினையும் சிலவாகிய செலவினையுமுடைய குதிரைப் படையையும் : பல் வேல் - பலவாகிய வேற்படையையுமுடைய ; எழினி விடுதொழில் முடிமார் - எழினி ஏவிவிட்ட தொழிலை முடிக்கும் பொருட்டு ; கல்காய் கனை எரி நடந்த கானத்து - பாறைகளைத் தீய்க்கும் மிக்க தீப் பரவிய காட்டிலே; வினைவல் அம்பின் விழுத்தொடை மறவர் - வினைசெய் ஆக்குதலில் வல்ல தப்பாதஅம்புத்தொடையையுடைய மறவர்; தேம் பிழி நறும்கள்மகிழின் - தேனாற் சமைந்த நறிய கள்ளையுண்ட செருக்கினாலே ; முனைகடந்து - போர் முனையை கடந்து; வீங்குமென் சுரைய வேற்று இனம் தரூஉம் - பருத்த மென்மையான மடியையுடைய வேற்று நாட்டு ஆனிரையை வென்றுகொள்ளும் முனைதலை திறந்த அதர் என்க.

விலங்கு மென் சுரை என்னும் பாடத்திற்கு வளைந்த மெத்தென்ற சுரை என்க. ஏற்று ஆ ஒய்யும் என்று கண்ணழித்து ஏற்றினோடு ஆக்களை ஒய்யும் என்று பொருள் கோடலுமாம். முடிமார் - முடிக்கின்ற வீரர் என்றலுமாம். புடைப்பு, புடைத்தலாலுண்டான ஓசைக்காயிற்று.

## 106. மருதம்.

எரி கொழுந்துவிட்டாற் போன்ற தாமரை மலர்களையுடைய வயலிடத்தே தீப்பொறிகள் கிளைத்தாற்போலத் துள்ளி எழும் பலவாகிய சிறு மீன்களை உண்ணும்பொருட்டு வெறி நாற்றத்தையுடைய பசிய இலையின்மேலே பறத்தலொழிந்த முதிய சிச்சிலிப்புள் மெல்ல

மெல்ல வருந்தி வந்திருக்கும் நீர்த்துறைகள் கெழுமிய ஊரனது மனையோள் தன் கொழுநனை எம்மொடு வெறுக்கின்றாள் என்கின்றார்கள்; அவ்வாறு அவள் வெறுக்குமாறு யாம் ஒன்றும் செய்யாமாயினும், அவள் கூறும் புறமொழியைக் கேட்டு உய்யமாட்டாமையின்றேமே;

தண்ணுமை கண்ணின் தன் வயிறு அலைஇயர் செறி தொடி தெளிர்ப்ப வீசி சிறிது அவண் உலமந்து வருகம் சென்மோ தோழி - தண்ணுமையிடத்துக் கண்போலும் தன் வயிற்றை அத்தலைவி அலைத்துக் கோடற்பொருட்டாகச் செறிந்த நம் தொடி ஒலிப்ப வீசி அவள் உறையும் சேரிக்கண் சிறிது பொழுது சூழ்வருவோம் வா தோழி என்று, பரத்தை தன்னைத் தலைமகள் புறங்கூறினாளாகக் கேட்டு அத் தலைமகட்குப் பாங்காயினோர் கேட்பச் சொன்னாள் என்க.

பழனத்து மீன் உணீஇயர் முதுசிறல் வைப்பமைய அசைபு யிருக்கும் துறைகெழு ஊரன் பெண்டு தன் கொழுநனை நம்மொடு புலக்குமென்ப: நாம் அது செய்யாமாயினும் உய்யாமையின், அப்பெண்டு தன் வயிறு அலைஇயர் சிறிது அவண் உலமந்து வருகம் சென்மோ தோழி என்று இயைக்க.

ஒளிறு வாள் தானை கொற்றம் செழியன் வெளிறு இல் கற்பின் மண்டு அமர் அடுதொறும் களிறு பெறு வல்சிப் பாணன் எறியும் தண்ணுமைக் கண்ணின் வயிறு - விளங்கும் வாட்படையால் வெற்றியையுடைய செழியனென்பவன் குற்றமில்லாத படைக்கலக் கல்வியினால் மண்டிய போரை அடுந்தோறும் களிற்றைப் பரிசில் பெறும் உணவினையுடைய பாணன் எறிகின்ற தண்ணுமையின் கண்போலும் வயிறு என்க.

'களிறு பெறு வல்சிப் பாணன்' என்பதற்கு, களிறும்போல பிறர் வலிந்து கொடுக்கத் தான் பெருமிதத்தோடு ஏற்றுக்கொள்ளும் வல்சியையுடைய பாணன் என்றும், களிறு பெறுகின்ற செய்ம்மிதியுணவைப் பெறுகின்ற பாணன் என்றும் கூறினும் பொருந்தும்.

'புதல்வற் பயந்த திதலை அவ்வயிற்று' என்றமையால், தலைவியது வயிற்றுக்குத் தண்ணுமைக் கண்ணினை உவமை கூறிய முகத்தான் தலைவியது இளமை கழிந்த முதுமைப் பருவத்தைப் பரத்தை எள்ளினாளாய்

பாணன் எறியும் தண்ணுமைக் கண்ணின் அலைஇயர் தன் வயிறே என்பதற்கு, பாணன் தன் தண்ணுமையின் கண்ணிடத்து எறிவது போலத் தலைவி தன் வயிற்றிடத்து அலைக்கும்பொருட்டு எனினுமமையும்.

பறத்தல் வல்ல இளைய சிரல் மீனைக் கவர்ந்துண்ண, பறை தப்பிய முது சிரல் அது செய்யமாட்டாது இளஞ் சிரலைப் புலந்திருந்தாற்போல, இள நங்கையுராகிய யாம் தலைவனை வசமாக்கி இன்ப நுகர, முதியளாகிய தலைவி அது செய்யமாட்டாமையின் எம்மைப் புலவாநின்றாளென்றாளாம்.

## 107. பாலை.

நீ செல அயரக் கேட்டொறும் பல நினைந்து அன்பின் நெஞ்சத்து ஆயாப் பொறை மெலிந்த என் அகத்து இடும்பை களைமார் துணை ஈர் ஓதி என் தோழியும் மணமனை கமழும் கானம் நின்னொடு வரும் - நீ உடன்கொண்டு செல்ல விரும்ப, அதைக்கேட்ட போதெல்லாம் பலவும் நினைந்து, அன்புடைய நெஞ்சத்திடத்து அதன் விளைவினை ஆராய்ந்து வருத்தமாகிய சுமையினாலே மெலிந்த என் மனத்தின்கண்ணுள்ள நோயினைக் களையும் பொருட்டு இணைந்த ஈரிய கூந்தலையுடைய என் தோழியும் மணமனைபோலக் கமழுங் கானத்தே நின்னொடு வருவள்என்று, தோழி தலைமகள் குறிப்பறிந்து வந்து தலைமகற்குச் சொன்னாள் என்க.

பசு நனை நறுவீ பரூஉப்பரல் காலை உறைப்ப மணமனை கமழும் கானம் - பசிய பூங்கொத்தினின்றும் நறிய பூக்கள் பருத்த பரலிடத்து நாட் காலையிலே உதிர்வதனால் கலியாண வீடு போலக் கமழாநிற்கும் கானம் என்க. 'அசாஅப் பொறை மெலிந்த' என்னும் பாடத்திற்குத் தளர்ந்து துன்பச் சுமையால் மெலிந்த என்க.

கருங்கல் வியல் அறை கிடப்பி வயிறு தின்று இருபுலி துறந்த ஏற்று மான் உணங்கல் - பெரிய கற்களையுடைய அகன்ற பக்க மலையிலே அடித்து வீழ்த்தித் தன் வயிறு நிறையத் தின்று பெரும்புலி துறந்தொழித்த மானேற்றின் வற்றிய தசையை; ஒலி கழை நெல்லின் அரிசியோடு முருக்கிய ஆன்நிணம் ஆனிலைப் பள்ளி அளை பெய்து ஓராங்கு அட்ட வால் வெண்சோறு புகர் அரைத்தேக்கின் அகல் இலை ஆங்கண் நெறி செல்வம் பலர் உவந்தனர் மாந்தும் - தழைத்த மூங்கில் நெல்லினரிசியோடும் தாம் கொன்றழித்த ஆனின் நிணத்தோடும் கூட்டி, இடைச்சேரியிலுள்ள தயிரைச் சொரிந்து ஒன்றாய்க் கலந்து சமைத்த மிக வெள்ளிய சோற்றைப் புள்ளிபொருந்திய அரையினையுடைய தேக்கின் அகன்ற இலையில் வைத்து ஆங்கு நெறியிற் செல்லும் அன்னியர் மகிழ்ந்தனராயுண்ணு கின்ற; கல்லா நீண்மொழி கதம் நாய் வடுகர் அருமுனை - வஞ்சின மொழியன்றிப் பிறிதொன்றனையுங் கல்லாத கோபம் மிகுத்த நாயை

யுடைய வடுகரது கடத்தற்கு அரிய பகைப்புலங்களை ; வல் ஆண் நீந்தி - வலிய ஆண்மையையுடைய நின்னொடு கடந்து;

உகும் மண் ஊறு அஞ்சும் ஒருகால் பட்டத்து - சரிந்து விழும் மண்ணினாலே விளையும் இடையூற்றுக்கு அஞ்சத்தக்க ஒரே ஒடுக்குவழியைக் கொண்ட ஓடையிலே உள்ள; இன்னா எற்றத்து இழுக்கி முடம் கூர்ந்து ஒரு தனித்து ஒழிந்த உரன் உடைநோன் பகடு - இன்னாமையையுடைய எற்றத்திலே ஏறி வழுக்கி முடம் மிக்குத் தன் இனத்தினின்றும் வேறாகத் தனித்து ஒழிந்த உடல் வலிமையோடு பாரஞ் சுமக்கவும் வல்ல பகட்டினுக்கு; அம் குழை இருப்பை அறைவாய் வான் பழல் புல் உளைச் சிறார் வில்லின் நீக்கி மரை கடிந்து ஊட்டும் - நிறமழகிய தழையையுடைய இருப்பையினின்றும் அற்ற வாயையுடைய வெள்ளிய தளைபொருந்திய பூவைப்புல்லிய உளைபோலும் தலைமயிரினையுடைய சிறார்கள் வில்லினாலே உதிர்த்து, அப்பூவினைத் தின்ன வரும் மரையாவைக் கடிந்து ஊட்டுகின்ற ; மரை அக சிறு ஊர் மாலை இன் துணை ஆகி (என் தோழியும் வரும்) - மலையகத்துள்ள சிறிய ஊரிடத்து மாலைக் காலத்தே உனக்கு இனிய துணையாகி என் தோழியும் வரும் என்க.

நீ செலவயரக் கேட்டொறும் பல நினைந்து மெலிந்த என் ஆகத்து இடுப்பை கள்ளொமார் நின்னொடு வடுகர் வல்லாண் அருமுனை நீந்தி என் தோழியும் வரும் என்றியைத்தலுமாம். தோழியும் என்ற உம்மை அவ்வாறு அவள் வருதலினது சிறப்புணர்த்தி நின்றது.

வம்பலர் தாம் தேடாமற் பெற்ற யான் உணங்கலை அரிசியொடு ஆன் நிணத்தோடும் கூட்டி அளைபெய்து அட்டு, அவ்வெண்சோற்றைத் தேக்கிலையில் வைத்து உவந்துண்டாற்போல, வேட்டை விருப்பான் வந்த நீயும் நின் முயற்சியானன்றி ஊழ்தானே கூட்டப் பெற்றத் தலைவியை நின் பெருஞ் செல்வத்தோடு வைத்துப் பாராட்டி, நின் பதிக்கண் கொண்டுய்த்து இன்புறுவாயாக என்று தோழி ஒப்புமைப்படுத்துரைத்தாளாகக் கொள்க. பெருஞ் செல்வமாவது: தாயத்தாற் பெற்ற பொருளும், தானீட்டிய பொருளும், தலைவியின் தமர்பாற் பெற்ற வரிசைப்பொருளுமாம் மூங்கிலரிசியைத் தாயத்தாற் பெற்ற பொருளாகவும், முருக்கிய ஆன் நிணத்தைத் தானீட்டிய பொருளாகவும், அளையைத் தலைவியின் தமர்பாற் பெற்ற வரிசைப் பொருளாகவும் கொள்க.

'மாலை துணையாகி வரும்' என்பதனை ஆகவெனத் திரித்து, மாலைக் காலத்து அவளுக்கு நீ துணை ஆவதனாலே வரும் என்றலுமாம்.

இருப்பைப்புழலை மரத்தினின்றும் வில்லினாலே நீக்கி மறை கடிந்து பகட்டினுக்கு ஊட்டும் சிறார் ஊர் என்க.

புழலுடைமையால் இருப்பைப்பூ, புழல் எனவும் உளை போறலின், சிறார் தலைமயிர் உளையெனவும் பட்டன. கல்லா நீண்மொழி, கல்லாமலே இயல்பாக நாவிடம் பயிலும் நீண்மொழி என்றலுமாம்.

வடுகர் வம்பலரோடு மான் உணங்கல், அரிசி, திணை, அலை இவை பெய்தட்ட வெண் சோற்றை உவந்தனராய் உண்ணும் அருமுனை என்றியைத்துரைப்பினுமமையும்.

உடையின் நீருண்டு அதன் நுழையினின்றும் ஏறமாட்டாது முடம் பட்ட உரனுடைப் பகட்டிற்குச் சிறார் இருப்பைப்பூவை மரத்தினின்றும் நீக்கி மறை கடிந்து ஊட்டினாற்போல, களவொழுக்கமாகிய இவ்வின்பத்தை நுகர்ந்து, இவ்வொழுக்கத்தினின்றும் நீங்கி வரைவொடு புகமாட்டாது வருந்தும் உரவோயாகிய உனக்குக் குற்றேவல் மகளாகிய நான் தலைமகளைத் தாயர் தன்னையரிடத்தினின்றும் வேறு பிரித்து நொதுமலர் வரைவு நீக்கி உடன்போக்குப் பொருத்துவல் என்றாளாம்.

மண்ணூறு அஞ்சும் என்னும் பாடத்திற்கு, நிலைத்த ஊற்றினுக்கு அஞ்சும் என்றும், மண் ஊறஞ்சும் என்னும் பாடத்திற்கு இட்ட காலைப் புதைக்கும் மண்ணின் ஊற்றிற்கு அஞ்சும் என்றும் கூறுப.

## 108. குறிஞ்சி.

தோழீ! நீ வாழ்வாயாக! காந்தள் அணி மலர் நறும் தாது ஊதும் தும்பி கையாடு வட்டில் தோன்றும் மையாடு சென்னிய மலை கிழவோன் - காந்தளின் அழகிய மலரின் நறிய தாதினை நுகரும் தும்பி மகளிர் கையால் ஆடும் சூது பொரு காயைப் போலத் தோன்றாநிற்கும் மேகம் இயங்குகின்ற சிகரங்களையுடைய மலை நாடனான தலைமகன் : அல்கல் ஆர் இருளிடை தமியன் வருதல் எவன் கொல் யாவதும் அருளான் - இரவின் வழங்கற்கரிய இருளினிடையிலே தனியனாக வருதலைப் பரிசரித்து ஏனோ சிறிதும் நமக்கு அருள் செய்யானாயிருக்கின்றான்; புணர்ந்தோர் புன்கண் அருளலும் உணர்ந்தோர்க்கு ஒத்தன்று - நட்டோரது துன்பத்தினை நீக்கியருளலும் அறிந்தோர்க்கு அவர் அறிவொடு ஒத்தது ஆகும்; அவ்வாறாகியும் நம் தலைவர்: மன் - அது செய்கின்றிலர் என்று, தலைமகன் சிறைப்புறத்தானாகத் தலைமகட்குச் சொல்லுவாளாய்த் தோழி சொன்னாள் என்க.

சிதறியவை முத்தம் வரை முதல் போல் புகர் யானை முகம் பொருத புது நீர் ஆலி-சிதறப் பெற்றனவான முத்தங்களையுடைய மலைப் புறம் போலுகின்ற புகரையுடைய யானை முகத்திலே மோதிய புதிய ஆலங்கட்டி ; பாறை பளிங்கு சொரிவது போல் வரிப்ப - பாறைக் கண்ணே பளிங்கு சொரியவது போல அழகு செய்ய ; கார் கதம் பட்ட கண் அகல் விசும்பில் - காரினாலே கோடையின் கதம் ஒழிந்த இடமகன்ற விசும்பிலே ; விடு பொறி ஞெகிழியின் கொடி பட மின்னி படு மழை பொழிந்த பாறுள் நக்குல் உயிர் துப்பின் கோண்மா வழங்கும் ஆர் இருளிடை வருதல் அருளான் - விடுகின்ற பொறியை யுடைய கடைக்கொள்ளிபோல வரிசையாக மின்னி மிக்க மழை பொழிந்த பாதி ராத்திரி இருளிலே மக்களின் உயிரினை உணவாக வுடைய கோண்மா என்னும் விலங்கு இயங்காநிற்கும் அரிய இருளிடை வருதலைப் பரிகரியான் என்க. மன் - கழிவின் கண் வந்தது.

வரைப் புறத்துச் சிதறிய முத்தம் யானை முகத்து அமைந்துள்ள புகருக்கு உவமை. அம்முகத்துப் பட்டு விழும் ஆலி பாறைக்கண் சொரியும் பளிங்கு போலும் என்க. கோண்மா, விலங்கு விசேடம்.

“ அச்சப் பொருளாவன : ‘ வாள்வரியின் அரிமா வாள் வரி வேங்கை, மூள் எயிற்று ஆரவெ முடங்கு அழல் செந்தீ, எற்று மதமா ஏக பாதம், கூற்றம் ‘கோண்மா குன்றுறை அசுணம்’ என்று சொல்லப்பட்டன போல்வன ” என்று பேராசிரியர் கூறுமாற்றான், ஆருயிர்த்துப்பிற்கோண்மா என்பதற்கு மக்களுயிரை உணவாகவுடைய கோண்மா எனப் பொருள் கூறப்பட்டது.

விரவுப் பொறி மஞ்ஞை வெரீஇ அரவின் அணங்குடை அருந்தலை பை விரிப்பவை போல் காயா மென் சினை தோய பல் துடுப்பு ஈடி எடுத்த அலங்கு குலை காந்தள் - விரவிய புள்ளியையுடைய மஞ்ஞையை வெருவி அரவினது வருத்தத்தைச் செய்யும் தீண்டற்கரிய தலைகள் படத்தை விரிப்பன போலவாகக் காயாவினது மெல்லிய கொம்பு தோய்ந்து, பல துடுப்புப் போல விரிந்து நீண்டு உயர்ந்த அசையுந் தன்மையவான குலையையுடைய காந்தள்கள் என்க.

காந்தண் மடலொடு தோய்ந்த காயாவின் சினையை அரவின் உடலுக்கும் அக்காந்தண் மடலைப் பைக்கும் உவமையாகக் கொள்க.

ஆர் உயிர்த் துப்பிற் கோண்மா என்று கொண்டு, பிறவிலங்கினுற் கொன்றுண்ணவரிய உயிரையுந் தான் கொன்றுண்ணவல்ல சிங்கம் என்றலுமாம்.

அழகிய காந்தளின் விரிந்த மடல் அணங்குடை அரவின் பை விரிப்புப் போலும் என்றது, அன்பு கெழுமிய நெஞ்சினையாகிய நீ இரவுக்குறியிடத்து வருகை ஆற்றாது தீமையை உன்னும் எங்களுக்குப் பெருங் கலக்கமா யிராநின்றது என்றவாறு.

## 109. பாலை.

பல் இதழ் மென் மலர் உண் கண் நல் யாழ் நரம்பு இசைத்தன்ன இன் தீம் கிளவி நலம் நல்கு ஒருத்தி இருந்த ஊர் - பலவாகிய இதழ்களையுடைய மெல்லிய மலர் போன்ற மையுண்ட கண்களையும் நல்ல யாழ் நரம்பு ஒலித்தாலன்ன இனிய தீவிய மொழியினையும் அழகினுக்கு நலந் தரவல்ல ஒப்பற்ற அழகியாகிய என் தலைவியிருந்த ஊரானது ;

கோடு உழு களிற்றின் தொழுதி ஈண்டி காடு கால் யாத்த நீடு மரச் சோலை நணந்தலை - பகைவர் மார்பினைத் தம் கோட்டால் உழும் களிற்றின் தொகுதி ஒன்றுகூடி வாழுமாறு காடு திசையெல் லாம் மண்டிய நெடிய மரச் சோலையாகிய அகன்றவிடத்திலே ; வெண் நுனை அம்பின் விசை இட வீழ்ந்தோர் எண்ணு வரம்பு அறியா உவல் இடு பதுக்கை கவலை செழு சுரம் கோள் பால் பட்டென வழங்குநர் மடிந்த அத்தம் - நிணந்தோய்தலால் வெள்ளிய நுனையை யுடைய அம்பின் விசைபட மரித்தோரின் எண்ணும் எல்லையறியாத சருகிட்ட பதுக்கைகளையுடை கவர்த்த வழி பொருந்திய சுரமானது எயினரால் சூழ்ந்துகொள்ளும் பகுதியிலே பட்டதென்று, செல்லுவாரற்ற அத்தத்திலே ; இறந்தோர் கைப்பொருள் இல்லையாயினும் மெய்க்கொண்டு இன் உயிர் செகார் விட்டு அகல் தப்பற்கு பெருங் களிற்று மருப்பொடு வரி அதள் இறுக்கும் அறனில் வேந்தன் ஆளும் வறன் உறு குன்றம் பல விலங்கின - சென்றவரது கையிற் பொருள் இல்லையாயினும் அவரை மெய்யினிடத்துப் பற்றிக்கொண்டு அவர் இனிய உயிரைக் கொல்லாராய் விட்டு அகன்றுபோன தவற்றுக்காகத் தன் ஏவலிளையரைப் பெரிய களிற்று மருப்போடு புலித் தோலைத் தண்டமாக இறுக்கச்செய்யும் அறனில்லாத வேந்தனை காட்டுத் தலைவன் ஆளாநின்ற வற்கடமுற்ற குன்றம் பல குறுக்கிட்டுள்ளன ; அன்றாயின் இன்னே யான் என் தலைவி பக்கல் மீண்டேகுவல் என்று, இடைச் சுரத்துத் தலைமகன் தன்னெஞ்சிற்குச் சொன்னான் என்க.

நலம் நல்கு ஒருத்தி இருந்த ஊர் குன்றம் பல விலங்கின என்றியைக்க. ஈண்டி, ஈண்டவெனத் திரிந்து நின்றது.

விழை வெளில் ஆடும் கழை வளர் நனந்தலை - கண்டவர் விழையுமாறு அணிலாடும் மூங்கில் வளர்ந்த நனந்தலை என்க. சோலை நனந்தலை, கழை வளர் நனந்தலை என்க.

விலங்குதல் - தடுத்தல். அறனில் வேந்தன் - அறஞ்செய்யாத மறமன்னன்; என்றார், 'மறக்குடி அறஞ்செய்யக் கெடும்' என்னும் வழக்கு நோக்கி என்க.

## 110. நெய்தல்.

யாம் தொடலை ஆயமொடு கடலுடன் ஆடியும் கானல் சிற்றில் இழைத்தும் சிறுசோறு குவைஇயும் வருந்திய வருத்தம் தீர சிறிது இருந்தனமாக - அன்றே! ஒரு நாள் யாம் மாலை போலத் தொடர்ந்த தோழிக் கூட்டத்தொடு கூடிக் கடலில் ஒருங்கே ஆடியும் கடற்கரைச் சோலையிலே சிற்றில் கோலியும் சிறு சோறு ஆக்கியும் வருந்திய வருத்தம் தீருமாறு சிறிது இளைப்பாறி இருந்தனமாக,

ஒருவன் எய்த வந்து தடம் மென் பணைத்தோள் மடம் நல்லீரே! எல்லும் எல்லின்று அசைவு மிக உடையேன் மெல் இலைப் பரப்பின் விருந்து உண்டு யானும் இக்கல்லென் சிறுகுடி தங்கின் மற்று எவனோ என மொழிந்தனன் -'தலைமகன் அப்போது அணுகி வந்து, 'பெரிய மெத்தென்ற மூங்கில் போலும் தோளையும் மடப்பத்தையுமுடைய நற்குணமுடையீரே! பகலும் ஒளி மழுங்கிற்று, தளர்ச்சியு மிகவுமுடையேன், இம்மெல்லிய இலைப்பரப்பின் நீவிர் குவைஇய சிறு சோற்றை விருந்துண்டு, இக்கல்லென்னும் ஒலியையுடைய சிறிய குடியில் யானும் தங்கினால் என்ன?' என மொழிந்தனன் என்றும்;

அவற் கண்டு இறைஞ்சிய முகத்தெம் புறம் சேர்பு பொருந்தி இழும் என இவை நுமக்கு உரிய அல்ல இழிந்த கொழு மீன் வல்சி என்றனம் - அவனைக் கண்டு கவிழ்ந்த முகமுடையேமாய் மறைவான பக்கத்தே சேர்ந்திருந்து இழுமென்னும் ஒலியுடன், 'இச்சோறு முதலியன நுமக்குத் தகுதியுடையவல்ல, இழிந்த கொழுமீன் உணவாகும்' என்றனம் என்றும்; என்னுநின்று;

நெடு கொடி நுடங்கும் நாவாய் தோன்றுவ காணுமோ என காலிற் சிதையா நில்லாது பெயர்ந்த பல்லோருள்ளும் என்னே குறித்த நோக்கமொடு நல் நுதால் ஒழிகோ யான் என அழி தக கூறி யாம் பெயர்க என்ன நோக்கி தான் தன் நெடு தேர் கொடிஞ்சி பற்றிநின்றோன்போலும்

என் மகட்கு என்றும் அன்னை அறியினும் அறிக - அப்போழ்து, 'நெடிய கொடி அசையும் மரக்கலம் தோன்றுகின்றன அவற்றைக் காண் போமா?' என்று சொல்லிக்கொண்டு, தமது சிற்றில் சிறுசோறு முதலிய வற்றைக் காலாற் சிதைத்துவிட்டு ஆண்டுநின்றும் நில்லாது பெயர்ந்த ஆயத்தார் பலருள்ளும் என்னையே குறித்த பார்வையொடு அத்தலைமகன் 'நன்னுதால்! யான் செல்லவா?' என்று, என் நெஞ்சம் அழியுமாறு கூறி, யாம் 'போம்' என்னலும், பெயராது இரக்கந் தோன்றப் பார்த்துக் கொண்டே, தன்னுடைய நெடிய தேரின் கொடிஞ்சியைப் பற்றிக் கொண்டு நின்றோனே போலும் என் மகட்கு நோயினைச் செய்தவன் என்றும் அன்னை அறிந்தாளாயினும் அறிக;

அலர்வாய் அம்என் சேரி கேட்பினும் கேட்க பிறிது ஒன்று இன்மை அறிய கொடு சுழி புகார் தெய்வம் நோக்கி நினக்கு கடு சூள் கூறி தருகு வன் - அதனை அலர் கூறும் வாயினையும் அம்மென்னும் ஒலியினையுமுடைய சேரிப் பெண்டிர் கேட்பினும் கேட்க, இதனைத் தவிர பிறிதொன்றுமின் மையை நீ அறியுமாறு வளைந்த நீர்ச்சுழியையுடைய புகாஅர்த் தெய்வத்தை நோக்கி அதன் முன் நீ தெளியும் வண்ணம் உனக்குச் சூள் கூறித் தரு வேன் என்று, தோழி செவிலிக்கு அறத்தொடு நின்றாளென்க 'என் றும்' என்னும் சொல் இரண்டிடங்களில் வருவித்துரைக்கப்பட்டன.

'ஒழிகோ யான் என அழிதகக் கூறி' என்புழி தலைமகன் மனத்து நிகழ்ந்த அழிவெல்லாம் 'ஒழிகோ யான்' என்ற உரையானே தோழி உணர்ந்தமையின் அது செவியுணர்வெனப்படும் என் [illegible]. (தொல். பொருள். 275.)

எல் - பகல்; எல்லின்று - ஒளி மழுங்கிற்று. கொழு மீன் - மீன் விசேஷம். தொடலை - மாலை; தொடலை ஆயம் - மாலை போலத் தலைவி யைத் தொடர்ந்த ஆயம் என்க. மற்று, 'யான் என் ஊர்க்கு ஏகுத லொழிந்து சிறுகுடித் தங்கின்' என்று பொருள் படலின், வினைமாற்றின் கண் வந்தது. போலும் ஒப்பில் போலியுமாம். சேரி, ஆகுபெயரால் அதன்கணுள்ள அலர் கூறும் பெண்டிற்காயிற்று. பெயர்க என்ன எனற் பாலது பெயர்கென்னவென நின்றது. ஒன்றுமின்மை என்புழி முற்றும்மை தொக்கு நின்றது.

## 111. பாலை.

உள் ஆங்கு உவத்தல் செல்லார் விண் தோய் பிறங்கல் மலை இறந் தோர் கறுத்தோர் எள்ளல் நெஞ்சத்து ஏ சொல் நாணி வருவர் வாழி

தோழி - தமக்குப் பொருளுள்ளபடியைக் கொண்டு உவவாராய் மிக்க பொருளை ஈட்டும் நினைவுடன் ஆகாயத்தை அளாவி உயர்தலையுடைய மலைகளைக் கடந்து சென்ற நம் தலைவர் பகைவர் இகழ்ச்சியொடு பட்ட நெஞ்சத்தோடு கூறும் அம்பு போலும் சொல்லுக்கு நாணினராய் விரைய வருவர்; தோழீ நீ வாழி என்று, தலைமகன் பிரிவின்கண் தோழி தலைமகளை ஆற்றுவித்தாள் என்க.

அரசயானை கொண்ட துகில் கொடி போல அலந்தலை ஞெமையத்து வலந்த சிலம்பி ஓடைக் குன்றத்து கோடையொடு துயல்வர - பட்டத்து யானை மீதே கொண்ட துகிற் கொடிபோல உலறிய தலையையுடைய ஞெமைமரத்துச் சுற்றிய சிலம்பிக்கூடானது ஓடையென்னும் பெயரிய குன்றத்திடத்தே வீசும் மேல் காற்றால் அசைய; மழை என மருண்ட மம்மர் ஓய் களிறு பல உடன் எடுத்த நோயுடை நெடுங்கை தொகு சொற் கோடியர் தூம்பின் உயிர்க்கும் மலை - அதனை மேகமென்று மருண்ட மயக்கத்தையுடைய இளைத்த களிறுகள் பல அம்மேகத்தைப் பற்றற்கு ஒரு சேரத் தூக்கிய துன்பத்தைபுடைய நெடிய கைகளாலவை ஒருங்குபட்ட சொல்லையுடைய கூத்தரது தூம்பென்னும் வாச்சியத்தைப் போல ஒலியாநிற்கும் மலை என்க.

துறையூர் ஓடை கிழார் (புறம். 136) என்னும் தொடரை நோக்க, ஓடை என்பது துறையூரைச் சார்ந்த ஓர் ஊர் என்று விளங்குதலால், ஓடைக்குன்றமென்பது, ஓடையூர்ப் புறத்துள்ள ஒரு குன்றமாதல் வேண்டும்.

அத்தம் கேழல் அட்ட நல் கோள் செந்நாய் ஏற்றை கம் என ஈர்ப்ப குருதி ஆரும் எருவை செம் செவி மண்டு அமர் அழுவத்து எல்லி கொண்ட புண் தேர் விளக்கில் தோன்றும் மலை - சுரத்திலே பன்றியை அட்ட தன் இரையை நன்கு பற்றவல்ல செந்நாய் ஏற்றையானது அக்கேழலை விரைய இழுக்க அதனால் வழியெல்லாம் ஒழுகிய குருதியை உண்ணும் எருவையினுடைய சிவந்த செவியானது மண்டிய போர்க்களத்திலே இரவிலே வீரரது மருமத்துக் கொண்ட புண்ணை ஆராய்தற்கு வைத்த விளக்குப் போலத் தோன்றுநிற்கும் மலை என்க.

துகில் - வெண்பட்டு; பட்டு விசேடம். அழுவம் - பரப்பு. எடுத்த நோய் - எடுத்ததனால் உண்டான நோய். கம் என, விரைய; தேய வழக்கு. ஏ - பெருக்கமுமாம்; ஏ சொல் - தம்மைப் பெருகப் பேசின

பேச்சு என்க. யானை, ஓடைக் குன்றத்துக்கும், அதன் மீதுள்ள கொடி மரம், அலந்ததலை ஞெமையத்துக்கும், துகிற்கொடி, சிலம்பிக்கூட்டிற்கும் உவமைகள். தூயல்வருகின்ற அச்சிலம்பிக் கூட்டினை மேகமெனக் களிறு மருண்டன வென்க. கோடியர்தூம்பினைக் களிற்றுயிர்த் தூம்பு என்று கூறும் வழக்கினையுங் காண்க. (மலைபடு. அடி 6.) அரசர் யானைக கொண்ட துகிற்கொடி என்னும் பாடத்திற்கு அரசர் யானையின்மீது உயர்த்துக் கொண்டுள்ள துகிற்கொடி என்க.

கோள்வல் எருவையேனும் தன்னால் எறியப்பட்ட இரையை உண்ணாது, செந்நாய் முயன்றட்ட கேழலின் உடற் குருதியை உண்டதாயினும், அதன் செவி புண்தேர் விளக்குப் போலக் கண்டோர்க்கு ஒளி விட்டாற்போல, ஆள்வினையையுடையவனேனும் தலைவன் தன்னால் ஈட்டப்பட்ட செல்வத்தை நுகராது, தனது குரவராலீட்டப்பட்ட செல்வத்தை நுகர்வானேனும், தன் இல்லறம் சிறந்ததுபயிற்றற்குரியதென்று, புகழ்தற்குரியதேயாகும் என்றாளாம். தோழி ஆற்றுவித்தவாறு என்னை எனின் : எளிதில் அழிதன்மாலையதான சிலம்பிக் கூட்டினை மேகமென மருண்டு அதனைப் பற்ற யானை கைந்நீட்டினாற்போல, நிலையற்றதான அளவுக்கு மிக்க பொருளை ஈட்டச் சென்றாரே ! இஃது என்னை கொல்! என்று, கறுத்தோர் எள்ளுவதற்கு நாணித் தலைவர் வருவர் என்று கூறி ஆற்றவின் என்க.

## 112. குறிஞ்சி.

கூனல் குறு நடை எண்கின் தொழுதி சிதலை செய்த செம் நிலை புற்றின் மண்புனை நெடுங்கோடு உடைய வாங்கி இரை நசைஇ பறிக்கும் அரை நாள் கங்குல் - கூனிய உடலையும் குறுமையான நடையையுமுடைய கரடியின் கூட்டமானது கறையான் செய்த சிவந்த நிலைப் புற்றின் மண் புனைந்த நெடிய சிகரம் உடைய இடந்து புற்றும் பழஞ் சோறாகிய இரையை நச்சி அப்புற்றினை அகழாநிற்கும் பாதியிராத்திரியிருளில் ; ஈன்றணி வயவுப் பிண பசித்தென ஒளிறு ஏந்து மருப்பின் களிறு அட்டு மறப்புலி குழுமும் பனி இரும் சோலை எமியம் என்னாய் ஈங்கு வந்தோய் ஈங்கே செய்தனை - குட்டிகளை ஈன்ற அணுமையை யுடைமையால் வயவுப் பசியையுடைய பிணவு பசித்ததென்று, மின்னுகின்ற ஏந்திய மருப்பினையுடைய களிற்றினை அட்டு வலிய புலி முழங்கா நிற்கும் குளிர்ச்சிபொருந்திய இருண்ட சோலைக்கண்ணே 'யாம்

தம்மையன்றே !' என்று நினையாயாய், இங்கு வந்த நீ தீங்கினையே செய்தோயாகுவை; ஐகாரம் பிரித்துக் கூட்டப்பட்டது.

நாள் இடைப்படின் என் தோழி வாழாள் தோளிடை முயக்கம் நீயும் வெய்யை - ஒரு நாள் நீ வாராது இடைப்பட்டாலும் என் தோழியும் உயிர் வாழாள். அவள் தோளிடை முயக்கத்தினை நீயும் இடைவிடாது விரும்புவோயாயிராநின்றனை ; கழியக் காதலராயினும் சான்றோர் பழியொடு வரூஉம் இன்பம் வெஃகார் - மிக்க காதலையுடையராயினும் சான்றோர் பழியோடு கூடி வருகின்ற இன்பத்தினை விரும்பாராவர் ; ஆதலால், வரையின் வான்றோய் வெற்ப எவனோ - வரையொடு புகின் வானைத் தோய்கின்ற வெற்பனே என்ன குறை ?

கணம் கொலை இருக்கும் கறி இவர் சிலம்பின் மணப்பரும் காமம் புணர்ந்தமை அறியார் தொன்று இயல் மரபின் மன்றல் அயாப் பெண் மீநாள் ஒழுக்கம் யாம் கண்கொள நோக்கி இவள் புது நாண் ஒடுக்கம் நொதுமல் விருந்தினம் போல காண்குவம் - கூட்டமான கலைமான்கள் ஒலியைத் தாழ விடுக்கின்ற மிளகுக் கொடி வளர்ந்தேறுகின்ற மலைச்சாரலிலே கூடுதற்கரிய காமம் புணர்ந்தமையை அறியாராய், நின் இருமுதுகுரவரும் சான்றோரும் பழைமையாக நடந்து வரும் மரபின்படி கலியாணஞ் செய்தலை விரும்பி, மகட்பேசிப் பெண்ணைக் கொள்ளும் முறையை யாம் கண் கொள்ளப் பார்த்து, மணத்திடத்துப் புதியாள் போலும் இத்தலைவியது நாணோடு ஒடுங்கியிருக்கும் ஒடுக்கத்தை அயலேமும் புதியேமும் போல யாமும் காண்போம் என்று, இரவுக்குறி வந்த தலைமகனை எதிர்ப்பட்டு நின்று தோழி சாற்காரம்படச் சொல்லி வரைவு கடாயினாள் என்க.

கூரல் எண்கு என்னும் பாடத்திற்கு உடம்பு வளைந்த எண்கு என்க. இருத்தல் - தாழ ஒலி விடுத்தல். பரிக்கும் என்னும் பாடத்திற்குப் புற்றினைச் சூழ்வாராநிற்கும் என்றும், கழியாக் காதலர் என்னும் பாடத்திற்கு நீங்காத காதலையுடையார் என்றும் பொருள் கொள்க

இழிந்த புற்றும்பழஞ்சோற்றை நச்சிய எண்கு சிதலையின் காப்பமைந்த செம்புற்றை உடைத்து, அகழ்ந்துகொண்டு அதனை உண்டாற்போல, இழிந்த களவொழுக்கத்தை நச்சிய நீயும் எம் தாயர் தன்னையரிழைத்த காப்பினை எல்லாம் சிதைத்து, என்னையும் நயப்பித்துக் கொண்டு தலைவியைப் புணர்ந்து சென்றாய் என்றனாம்.

தனக்குக் குட்டி யீன்று தன்னை மகிழ்வித்த தன் பிணவினுக்கு வயவினாலுண்டான பசியைத் தீர்த்தற்குக் களிற்றினை அட்டுப் புலியேறு முழங்கினாற்போல, நினக்குத் தோணலம் நல்கி மகிழ்வித்த நின் தலைவிக்கு நொதுமலர் வரைவு கேட்டலாலுண்டான தளர்ச்சியை நீக்கற்கு அவர் வரைவினை நீக்கி, நீ வரைந்துகொண்டு, நின் சுற்றத்துடன் ஆரவாரிப்பாயாக என்றாளாம்.

## 113. பாலை.

நன்று அல் காலையும் நட்பில் கோடார் சென்று வழிப்படூஉம் திரிபு இல் சூழ்ச்சியில் புன் தலை மடம் பிடி அகவுநர் பெருமகன் அமர் வீசு வண் மகிழ் அஃதை போற்றி காப்புக்கை நிறுத்த பல் வேல் கோசர் இளம் கள் கமழும் நெய்தலம்செறுவின் வளம் கெழு நன்னாடு அன்ன என் தோள் மணந்து அழுங்கல் மூதூர் அலர் எடுத்து அரற்ற நல்காது துறந்த காதலர் - கேடுற்ற காலத்தும் நட்பினரிடத்துக் கொண்ட நட்பிற் பிழையாராய், அவர் பாற் சென்று அவர் குறிப்பிலே படுகின்ற திரியாத அறிவினாலே, புல்லிய தலையையுடைய மடப்பிடியைக் கூத்தர் தலைவனுக்கு அமரிடத்துக் கொடுக்கும் வள்ளிய மதுவுண்டு மகிழ்தலையுடைய அஃதை என்பவனைப் பாதுகாத்துப் பின்னும் அவற்கு ஏதம் வாராது காவலானவிடத்து வைத்து நிறுவிய பல வேற்படைகளையுடைய கோசரது இளங்கள் மணவாநின்ற நெய்தலஞ்செறு வென்னும் வளங்கெழுமிய நல்ல நாடு போலும் என் தோளை மணந்து, இவ்வாரவாரமுடைய முதிய ஊர் அலரை மிகுத்துக் கூறவும் அருள் செய்யாது துறந்த நம் காதலர் என்க.

நட்பிற் கோடாராய், வழிப்படூஉம் திரிபில் சூழ்ச்சியிற் கோசர்; அஃதைப் போற்றிக் காப்புக்கை நிறுத்த கோசர் என்றியைக்க.

நெய்தலஞ்செறு வென்பது நெய்தலங்கானல் (புறம். 10, 203.) என்பது போல ஓர் ஊர் போலும். இந் நெய்தலஞ்செறுவினைத் தலைமையாகக் கொண்ட நாட்டினை நெய்தலஞ் செறுவினன்னாடு என்றார்.

எழாஅ பாணன் நன் நாட்டு உம்பர் நெறி செல் வம்பலர் கொன்ற தெவ்வர் எறிபடை கழீஇய சேய் அரி சில் நீர் அறு துறை அயிர் மணல் படு கரை போகி சேயர் என்றலின் சிறுமை உற்ற என் கையறு நெஞ்சத்து எவ்வம் நீங்க - போரில் முதுகிட்டார்மேற் போர்க்கெழாத பாணனது நல்ல நாட்டிற்கு அப்பாலுள்ள பாலை நில வழியோடு

செல்லும் அன்னியரைக் கொன்ற பகைவர் தாம் எறிந்த படைக்கலன் களைக் கழுவியதனாற் சிவந்த அரித்தொழுகுகின்ற சிலவாகிய நீரும் அற்றுப்போகின்ற துறைக்கண்ணேயுள்ள நுண் மணலையுடைய பெருங் கரையையுந் தாண்டி நெடுந் தூரத்தேயுள்ளார் என்று பலரும் கூற வினாலே நோயுற்ற என் செயலொழிந்த நெஞ்சத்திடத்துள்ள வருத்தம் நீங்குமாறு; அவர் வினை செய் மருங்கின் என் உயிர் செலீஇயர் - அவர் ஆள்வினை செய்யுமிடத்து என் உயிர் செல்வதாக; செல்லின், என்றும் அழாம் உறைதலும் உரியம் - எக்காலத்தும் அழாமல் உறைத லுக்கும் உரியேமாவேம் என்று, தலைமகன் பிரிவின்கண் தலைமகள் தோழிக்குச் சொன்னாள் என்க.

பராரை அலங்கல் அம் சினை குடம்பை புல் என புலம் பெயர் மருங்கின் புள் எழுந்தாங்கு மெய் இவண் ஒழிய என் உயிர் போகி அவர் வினை செய் மருங்கிற் செலீஇயர் - பருத்த அரையிற் கிளைத்துள்ள அசைவியல்புடைய அழகிய கொம்பிடத்துள்ள கூடு புற்கென்ன வேற் றிடத்தே பெயருங் கூற்றிலேயுள்ள புள் எழுந்து போயதுபோல என் உடம்பு இவ்விடத்துத் தனித்து ஒழிய, என் உயிர் சென்று, என் தலைவர் வினைசெய்யு மிடத்துக்குப் போகக்கடவது என்றாள் என்க.

கால் பொரூஉம் மெலியா பாடு இன் நோன் அடியன் வன் சுரை பெய்த அல்கு வல்சியன் இகந்தனவாயினும் பகைவர் ஓம்பினர் உறையும் கூழ்கெழு குறும்பில் குவைஇமில் விடைய வேற்று ஆ இடம் பார்த்து ஒய்யும் பாணன் - காற்றோடு உறழ்ந்த மெலியாத ஒலியினிய வலிய அடியினானும், வலிய மூங்கிற் குழாயிற் பெய்த மிக்க உணவினானும், தன் நாட்டு எல்லையினைக் கடந்தனவாயினும் பகைவரைப் பரிகரித்தனராகி வீரர் உறையும் உணவுப் பொருள் மிக்க குறும்புகளிலுள்ள திரண்ட இமிலையுடைய விடையோடு பொருந்திய பகைப்புலத்து ஆநிரையை இடனோக்கிக் கவருவானுமாகிய பாணன் என்பான் என்க.

செருப்பிடைச் சிறு பரலோசை போல நெடிய ஓசையுடைய காலன் என்பார், 'பாடின் நோன் அடியன்' என்றார். பாட்டினோ னடியன் என்னும் பாடத்திற்கு, பாடு பொருந்திய வலிய அடியன் என்றுரைக்க.

'கால்பொரூஉ மெலியாப் பாடினோ னடிய
னல்கு வன்சுரைப் பெய்த வல்சிய
னிகந்தன வாயினு மிடம்பார்த்துப் பகைவ

ரோம்பின ருறையுங் கூழ்கெழு குறும்பிற்
குவையிமில் விடைய வேற்ரு வொய்யும்'

என்று காணப்படும் பாடங்கொண்டு இப்பொருள் கொள்ளப்பட்டது. கல்பொருஉம் என்னும் பாடத்திற்குக் கல்லை ஒக்கும் என்க. 'அகன்கு லஞ்சுவைப் பெய்த வல்சியர்' என்ற பாடத்திற்கு அகன் சுவை சூல் பெய்த வல்சியர் என்று மாறி, அகன்ற குழாயின்கண் சூல்போலப் பெய்த உணவினர் என்க. இத்தகைய இளையர் பலரோடு சென்று குறும்பில் விடைய வேற்ரு ஒய்யும் பாணன் என்றுரைக்க. சுவைப் பெய்த வல்சிய ராய், பகைவரை ஒம்பினராய் வீரர் உறையும் குறும்பில் இடம் பார்த்து ஆ ஒய்யும் பாணன் என்றியைத்தலுமாம். அல்குலஞ்சுவைப் பெய்த வல்சி என்னும் பாடத்திற்கு, மடியிலுள்ள அழகிய குழாயில் பெய்த வல்சி என்று உரைக்க. அகன் சுவை என்றது, உணவு மிகுதியாகக் கோடற்கும், அதனை எளிதிற் கையிட்டு எடுத்தற்கும் என்க. குறும்பு - சிற்றரண். குறும்புகள் தன் எல்லையை இகந்தனவாயினும், ஆண்டுள்ளார் பகைவரை ஒம்பினரா யிருப்பினும், அவ்விடத்துள்ள ஆனிரையை நோனடியனாகவும் அல்கு வல்சியனாகவும் சென்று இடம் பார்த்து ஒய்யும் பாணன் என்க. 'வலிமிகு முன்பிற் பாணன்' என்றும், 'பாணன் மல்லடு மார்பின் வலி' என்றும், 'வடாஅது பல்வேற் பாணன் நன் நாடு' என்றும் இந்நூலுள் பாராட்டப் பட்டுள்ளமையால், இவன் சிறந்த வலி படைத் தோனென்றும், இவன் நாடு தமிழ் நாட்டினுக்கு வடபால் உள்ளதென் றும், நன்மை வாய்ந்ததென்றும் அறியப்படும்.

கழை இரும் சுருணை கனி காழ் நெடு வேல் விழவு அயர்ந்தன்ன கொழும் பல் திற்றி பாணன் - செறிந்த கரிய வளைந்த பூணிடத்து நெய் கனிந்த தண்டையுடைய நெடிய வேலுக்கு விழாக் கொண்டாடினாற் போலக் கொழுவிய பலவாகிய இறைச்சியையுடைய பாணன் என்க.

வேல்விழா வென்பது 'தொடை விழா' (அகம். 187) என்பது போல ஒரு விழவு. சுருளுடைமையிற் பூணைச்சுருணை என்ருர். வேலையும் விழாவயர்ந்தாலன்னதிற் றியையும் உடைய பாணன் என்றுரைப்பினு மமையும். ஒம்புதல் - பரிகரித்தல். குறும்பில் ஒய்யும் - தன் குறும்பிற் குக் கவர்ந்துகொண்டு வரும் என்றலுமாம்.

## 114. முல்லை.

எல்ல தோழி கேளாய் வேலன் வெறி அயர் களத்து விரவுவீ சிறு பலதாஅய் உறைத்த ஈர் நறு புறவின் உரவு கதிர் மழுகிய கல் சேர்

ஞாயிறு அரவு நுங்கு மதியின் ஐயென மறையும் சிறு புன் மாலையும். அவர் உள்ளார் என நம் புலந்து - எல்லா, தோழி, கேட்பாயாக! வேலன் வெறியாட்டு அயர்கின்ற களத்திடம் போல ஒன்றாய்க் கலப்புற்ற சிறிய பலவாகிய பூக்கள் தாவி யுதிர்ந்த ஈரிய நறிய புறவிலே பரக்கும் கிரணங் கள் மழுக்கமடைந்த அத்தகிரி யடையும் ஞாயிறானது அரவால் விழுங்கப் பட்ட மதிபோல வியக்குமாறு மறைகின்ற சிறிய புல்லிய மாலைக் காலத்திலேயும் நம் தலைவர் நம்மை நினையாரோ எனச் சொல்லி நம் மொடு புலந்து என்க.

திருநகர் உறையும் அடங்கிய மாசில் கற்பின் அரி மதர் மழைக்கண் அமை புரை பணைத்தோள் அணங்கு சால் அரிவையை எவ்வம் நீங்கக் காண்குவம் நூலறி வலவ பொலம் படை கலி மா பூண்ட தேர் உவக்காண் மூதூர் கடவுமதி - ஐசுவரியம் மிக்க தனது மாளிகையின் கண்ணே உறைகின்ற அடங்கிய மாசில்லாத கற்பினையும் அரிபரந்த மதர்த்த குளிர்ந்த கண்ணினையும் மூங்கிலை ஒத்துப் பருத்த தோளினையு முடைய அருந்ததியின் சிறப்பெல்லா மமைந்த எம் தலைவியை வருத்தமெல்லாம் நீங்கக் காண்பேம் அசுவ ஹிருதய நூல் வல்ல பாக! பொன்னாலாகிய பல்லணத்தையுடைய மனஞ் செருக்கிய குதிரை பூண்ட தேரை ஊங்கேயுள்ள மூதூர்க்குக் கடவுவாயாக என்று வினைமுற்றி மீளுந் தலைமகன் தேர்ப்பாகற்குச் சொன்னான் என்க.

எவ்வம், அரிவையது எவ்வமும் எம் எவ்வமும் ஆம்.

நெடுங் கொடி நுடங்கும் வான் தோய் புரிசை யாமம் கொள்பவர் நாட்டிய நளி சுடர் வானக மீனின் விளங்கித் தோன்றும் அருங்கடிக் காப்பின் அஞ்சுவரு மூதூர் - நெடிய கொடி யசையும் வானையளாவிய மதிலிலே யாமந்தோறும் காவல் முறை கொள்பவர் நாட்டிய ஒளிசெறிந்த விளக்கமானது வானத்திடத்து மீன்போல விளங்கித் தோன்றாநிற்கும் அணுகவரிய சிறந்த காவலமைந்த அச்சம் வருகின்ற முதிய ஊர் என்க.

வேலன் வெறியயர் களம் போலும் விரவு வீ தாஅய் உறைத்த புறவு என்க. எனச் சொல்லி என்று ஒரு சொல் வருவித்துரைக்கப்பட்டது. 'கேளாயெல்ல' என்பது முதலாக 'உள்ளாரவரென' வென்பது ஈறாக நின்ற சொற்கள் தலைவி கூற்று. அதனைத் தலைமகன் கொண்டு கூறி னான் என்க.

அணங்கு, அருந்ததி; தெய்வப் பெண்ணுமாம். அசுவ ஹிருதய நூலாவது - குதிரையின் மனத்தை அறிந்து அதனை விரையக் கடாவ

வல்ல மந்திரம். கடி, ஈண்டுச் சிறப்பினை யுணர்த்திற்று. உவக்காண் - ஊங்கே. ஒட்டி நின்ற இடைச் சொல். (குறள். 1185.)

## 115. பாலை.

அழியா விழவின் அஞ்சுவரு மூதூர் பழியிலராயினும் பலர் புறம் கூறும் அம்பல் ஒழுக்கமும் ஆகிய வெம் சொல் சேரியம் பெண்டிர் என்னினும் எள்ளுக நுண் பூண் எருமை குடநாட்ட அன்ன என் ஆய் நலம் தொலையினும் தொலைக - அழியாத விழவினையுடையதும் பகைவர்க்கு அச்சம் விளைப்பதுமான இம்மூதூரின்கண்ணுள்ள பழியற்றவராயினும் பலரையும் புறங்கூறுகின்ற அம்பல் ஒழுக்கமுடைமையோடு வெஞ் சொல்லையுஞ் சொல்லும் சேரிப் பெண்டிர் என்னை எள்ளினும் எள்ளுக; நுண்ணிய வேலைப்பாடமைந்த ஆபரணங்களையுடைய எருமை என்பானது குடநாட்டின் நலன் போலும் என்னுடைய ஆராய்ந்த நலன் தொலையினும் தொலைக என்க.

நாட்டின் நலன் அதனை உற்றார்க்குப் பயன்படல் போலப் பொற்றொடி மகளிரின் நலன் அவரை உற்ற தலைமகற்கு உதவலின், 'நாட்டன்ன நலன்' என்றாள். இவ்வாறே கீழ் வந்தனவற்றிற்கும் மேல் வருவனவற்றிற்கும் உரைத்துக் கொள்க. அம்பல் ஒழுக்கமாவது - அம்பலைக் கூறும் ஒழுக்கம்; மூதூர்ச் சேரிப் பெண்டிர் என்றியைக்க.

நன்னர் ஆய் கவின் தொலைய சேய் நாட்டு நம் நீத்து உறையும் நர் காதலர் பொருட்பிணி கூடாமையின் நீடியோர் என்றும் நோயிலராக - நன்மை வாய்ந்த ஆய்ந்த என் அழகு கெடுமாறு சேய்மைக்கணுள்ள நாட்டிலே சென்று நம்மை நீத்து உறையும் நம் காதலர் பொருட்கூட்டம் கூடாமையினாலே மீள்வேமென்று குறித்த காலத்து மீளாது நீட்டித் தவரேயாயினும், நோயிலராகுக என்று, பிரிவிடை வற்புறுக்கும் தோழிக்குத் தலைமகள் சொன்னாள் என்க. பொருட் பிணி - பொருளைப் பிணித்தல்; கூட்டுதல்.

செருவில் வீழ்ந்த வாய் வாள் எவ்வி முன் பாணர் பரித்து இடூஉ பழிச்சிய கைதொழு மரபின் வள் உயிர் வணர் மருப்பு அன்ன ஒள் இணர் சுடர் பூ கொன்றை ஊழ் உறு விளை நெற்று அறை மிசை தாஅம் அத்த நீளிடை - செருவிடை வீழ்ந்த தப்பாத வாட் படையை உடைய எவ்வி என்பானுக்கெதிரில் பாணர் ஒடித்துப் போகட்டுப் பராவிய கையாற்றொழும் மரபினையுடைய வளவிய ஒலியையுடைய வளைந்த

யாழின் மருப்புப் போன்ற ஒள்ளிய இணரையும் விளக்கம்போலும் பூவையுமுடைய கொன்றையின் முறையுற்று முற்றிய நெற்று கற்பாறை மிசையே தாவி யுதிரும் சுரத்தின் நீண்ட வழியிலேயுள்ள என்க.

வாய் வாள் எவ்வி வீழ்ந்த செருவில் என்றாரேனும், செருவில் வீழ்ந்த வாய் வாள் எவ்வி என்பது கருத்தாகக் கொள்க. பாணர் யாழ் மருப்பினை முறித்தது, எவ்வியின் சாக்காட்டிற்குப் பிறகு தாம் யாழினாற் பயன் கோடலரிதென்று அவர் கையறுதலின்.

பிறை மருள் வான் கோட்டு அண்ணல் யானைச் சினம் மிக்க முன்பின் வாமான் அஞ்சி இனம் கொண்டு ஒளிக்கும் அஞ்சுவரு கவலை சேய்நாடு - பிறையை ஒக்கும் வெளிய கோட்டையும் தலைமையையுமுடைய யானையையும், சினம் மிக்க வலிமையையும், தாவிச் செல்லுந் தலையுடைய குதிரையையுமுடைய அஞ்சி என்பான் தான் வென்று கொண்ட ஆன் இனத்தைக் கூட்டிக்கொண்டு ஒளிக்கும் அச்சம் வருகின்ற கவர்த்த வழியையுடைய சேய் நாட்டிலே என்க.

'செல்பரிக் குதிரைப் பல்வேல் எழினி,............மறவர்............ மகிழின் முனைகடந்து,.........வீங்கு மென்சுமைய வெற்றினந் தரூஉம், முனைதலை திறந்த வேனிற், பனைதலை மணந்த பல்லிநர்' எனக் கிளந்த 105ஆம் பாடலாலும்' இவ்வஞ்சி வேற்று நாட்டிற் சென்று ஆனிரை கவர்ந்த செய்தி அறியப்படும். எழினி என்பது அஞ்சி அதிகமானுக்கு ஒரு பெயர். (புறம். 158). 'கடுமான் தோன்றல் நெடுமான் அஞ்சி' (புறம். 206) என்பதும் இவன் விரைந்த செலவையுடைய குதிரையை யுடையனாயிருந்தமையைப் புலப்படுத்தும். 'மடவர் மகிழ்துணை நெடுமான் அஞ்சி, இல்லிறைச் செரீஇய ஞெலிகோல் போலத், தோன்றா திருக்கவும் வல்லன் மற்றதன், கான்றுபடு கனையெரி போலத் தோன்றவும் வல்லன்றான் தோன்றுங் காலே' என்ற 315 ஆம் புறப்பாட்டால் இவ் அஞ்சி ஒளித்ததும் வெளிப்பட்டிருந்ததும் அவன் ஆனிரை வென்று கொண்ட காலத்துப்போலும் என ஊகித்தலாகும்.

இனி, 'யானை சினமிகு முன்பின் வயமான் அஞ்சி........ ஒளிக்கும்' என்பது பாடமாயின், யானையானது சிங்கத்தை அஞ்சித் தன் இனத்தைக்கொண்டு ஒளிக்கும் என்க.

இவ்வுரைக்குச் சிங்கத்தின் அச்சமொழிய யானையானது தன் இனத்தைக் கூட்டிக்கொண்டு சென்று காத்தாற்போல, சேரிபெண்டிரது

அம்பலச்சம் ஒழிய எம்மைத் தலைவர் உடன்கொண்டு சென்று காத்தற்குரியார் என்பது உள்ளுறையாகக் கொள்க.

அம்பல் ஒழுக்கச் சேரிப் பெண்டிர் எள்ளினும் எள்ளுக, என் நலம் தொலையினும் தொலைக, கொன்றை நெற்றுத் தாஅம் அத்த நீளிடையிலேயுள்ள அஞ்சுவரு கவலையையுடைய சேய் நாட்டின்கண் பொருட்பிணிக் கூடாமையின் நீடியோராய் நம் நீத்து உறையும் காதலர் என்றும் நோயிலராக என்றானென்க.

## 116. மருதம்.

எரி அகைந்தன்ன தாமரை இடை இடை செந்நெல் கால் அரிந்து குவித்த வினைஞர் கட்கொண்டு மறுகும் சாகாடு அளற்று உறின் ஆய் கரும்பு அடுக்கும பாய் புனல் ஊர பெரிய நாணிலை மன்ற நீயே - தீயானது கப்பு விட்டாலொக்கும் தாமரையின் இடை இடையே செந்நெற்றாளை அரிந்து போகட்டுக் குவித்த நெல் விளைக்கும் உழுநர் கள்ளைக்கொண்டு போகும் வண்டி சேற்றிலே புதையுமாகில் அதன் ஆழ்ச்சியைப் பரிகரித்தற்கு ஆராய்ந்தெடுத்த கரும்பினை அவ்வண்டியின் காலின் கீழே அடுக்குகின்ற பாயும் புனலையுடைய ஊரனே! நீ மிகவும் தெளிவாக நாணில்லாதவனையாளுய்! என்க.

பொரி என புன்கு அவிழ் அகல் துறை பொலிய ஒள் நுதல் நறு மலர் காண் வரும் குறு பல் கூந்தல் மாழை நோக்கின் காழ் இயல் வனம் முலை எஃகுடை எழில் நலத்து ஒருத்தியொடு நெருநை வைகு புனல் அயர்ந்தனை என்ப - நெற்பொரி போலும் புன்கு மலர்கின்ற அகன்ற யாற்றின் துறை பொலிய ஒள்ளிய நுதலையும் நறிய மலர் வேய்ந்த காண்டற்கினிய குறிய பலவாகிய கூந்தலையும், செருக்கிய நோக்கையும், முத்துவடம் அசையும் அழகிய முலையையும் கூரிய எழுச்சி யழகையுமுடைய ஒரு பரத்தையொடு இடையறாது ஒழுகும் புனலிலே நீர் விளையாடினாய் என்றுநின்றார்கள் என்க. எழில் நலம் - யௌவன போகமுமாம்.

என் நலத்து ஒருத்தியொடு என்னும் பாடத்திற்கு என்போலும் நலத்தினையுடைய ஒருத்தியொடு என்க. இஃது உவமைகருதாது, வன்மையுரை தோன்ற நின்றது. எம்மைப் போலும் பொதுமகள் ஒருத்தி என அவளை இழித்துக் கூறியவாறுமாம்.

அது பொய் புறம் பொதிந்து யாம் கரப்பவும் கையிகந்து - அதைப் பொய்யெனப் புறத்தே மூடி யாம் மறைக்கவும் எம் செயலைக் கடந்து;

மலர் தார் மை அணி யானை மறப்போர் செழியன் பொய்யா விழவின் கூடல் பறந்தலை உடன் இயைந்து எழுந்த இரு பெரு வேந்தர் கடல் மருள் பெரு படை கலங்க தாக்கி இரங்கு இசை முரசம் ஒழிய அவர் பரந்து ஓடு புறம் கண்ட ஞான்றை ஆடு கொள் வியல் களத்து ஆர்ப்பினும் பெரிது அலர் தானே ஆகின்று - விரிந்த பூமாலையையும் அஞ்சனமணிந்த யானையையும் வலிய போரையும் உடைய நெடுஞ் செழியன் என்பான் தவிராத விழாவினையுடைய கூடற் பறந்தலையிலே தன் மீது சேர்ந்தியைந்து போர்க்கெழுந்த சேர பாண்டியர் என்னும் இருபெரு வேந்தரது கடலை ஒக்கும் பெரும் படை கலங்குமாறு தாக்கி, மிக்க ஒலியையுடைய அவரது வீர முரசம் அவரிடத்தினின்றுமொழியு மாறு அவர் நாற்புறமும் சிதறி ஓடின புறத்தைக் கண்டவன்று வெற்றி யைக் கொண்ட பெரிய களத்துள்ள வீரர் ஆர்த்த ஆர்ப்பினுங் காட்டிற் பெரிதாக அலர் தானுகவே ஆயிற்று என்று, தோழி தலைமகனை வாயின் மறுத்தாள் என்க.

இரங்கிசை முரசம் ஒருபொருட்பன்மொழி. களம், ஆகுபெயரால் அதன்கண்ணுள்ள வீரர்க்காயிற்று.

மாழை - செருக்கு ; காழ் - முத்து வடம். எஃகு - கூர்மை. எழிலாவது வளர்ந்தமைந்த பருவத்தும் இது வளர்ந்து மாறியதன்றி இன்னும் வளருமென்பதுபோன்று காட்டுதல். வைகு புனல் - இடை யறாத ஒழுக்குடைய புனல்; வைகார்ப்பு என்பது போல. அஞ்சனத்தை யானையின் மத்தகத்தில் அணிதல் மரபாதலின், 'மையணி யானை' எனப் பட்டது. 'மையணி மதயானை மத்தக வகலல்குல்' (சிந். 2434)

சேற்றிலூற்ற கள் நிறைந்த சாகாட்டின் எவ்வதத்தினைத் தீர்த்தற்கு அதன் காலில் ஆய்ந்த கரும்பினை அடுக்கிச் சிதைத்தாற்போல நின் பாண னால் மயக்குறுத்தப்பட்ட இழிந்த குண நிறைந்த பரத்தையது காம நோயினைத் தீர்த்தற்கு அவளுக்குத் தாழ்ந்தாளாகத் தலைவியைச் செய்து அவளது சிறந்த நலத்தினைச் சிதைத்து ஒழுகுவான் என்றவாறு.

## 117. பாலை.

மௌவலொடு மலர்ந்த மா குரல் நொச்சியும் அ வரி அல்குல் ஆயமும் உள்ளாள் சாந்து உளர் வணர் குரல் வாரி வகை வகுத்து யான் போது துணைப்பத் தகரம் மண்ணாள் எதிலன் பொய்ம்மொழி நம்பி ஏா வினை வளம் கெழு திருநகர் புலம்பப் போகி-மௌவற் பூவோடு மலர்ந்த

கரிய கொத்தினையுடைய நொச்சியையும் அழகிய வரிபொருந்திய அல்குலை யுடைய ஆயத்தையும் நினையாளாகி, சாந்தொடு கோதும் நெறித்த மயிர்க் கற்றையை வாரி வகை வகையாக வகுத்து யான் போதுபெய்யவும் அதற்கு உடன்பட்டுத் தகரத்தினைப் பூசாதாளாகி, அன்னியனொருவனுடைய பொய்ம் மொழியை விரும்பி, அழகிய சித்திரத் தொழிலமைந்த வளங் கெழுமிய தன் செல்வமிக்க மாளிகை தனித்தொழியத் துறந்துபோய்; வெரு வரு கவலை யாங்கண் அருள் வர கரும் கால் ஓமை ஏறி வெண்தலைப் பருந்து பெடை பயிரும் பாழ் நாட்டு ஆங்கண் பொலம் தொடி தெளிர்ப்ப வீசி சேவடி சிலம்பு நக இயலிச் சென்ற என் மகட்கு - வெருவத்தக்க கவலையிடத்தே கேட்டார்க்கு அருள்வருவ்வண்ணம் கரிய காலையுடைய ஓமைமீதேறியிருந்து வெண்டலைப் பருந்து தன் பெடையினை யழையா நிற்கும் பாழான நாட்டிடத்தே தன் பொற்றொடி ஒலிப்ப வீசியும் சேவடியிலுள்ள சிலம்பு விளங்க உலாவியும் சென்ற என் மகளுக்கு என்க.

தன்னோர் அன்ன தகை வெம் காதலன் பின்னுவிட - தன்னையே ஒத்த தகைமையையுடைய விரும்பிய காதலன் பின்னுதலைச் செய்ய; வாணன் சிறுகுடி வடாஅது கான் யாற்று அறல் போன்று (வணர் குரல்) தாழ்ந்தன கொல் - வாணன் சிறுகுடிக்கு வடபா லுள்ளதான கான்யாற்று அறல் போன்று நெறித்த மயிர்க்கற்றையானவை தாழ்ந்தன போலும் என்று, மகட் போக்கிய செவிலித்தாய் சொன்னாள் என்க.

தன்னோடு ஒப்பாவது: பிறப்பு, ஒழுக்கம், ஆண்மை, பிராயம், உருவு, அன்பு, நிறை, அருள், அறிவு, செல்வம் என்ற பத்து வகை யாலும் என்க.

நெடு கால் மாஅத்து ஊழ் உறு வெண் பழம் கொடு தாள் யாமை பார்ப்பொடு கவரும் பொய்கை சூழ்ந்த பொய்யா யாணர் வாணன் சிறு குடி வடாஅது தீ நீர் கான்யாற்று அவிர் அறல் போன்று சிறுபுறம் புதைய நெறிபு தாழ்ந்தன கொல் - நெடிய காலையுடைய மாமரத்திலே செவ்வி யழிந்து உதிர்ந்த சுவையற்ற பழத்தை வளைந்த காலையுடைய யாமையானது தன் பார்ப்பொடு கவராநிற்கும் பொய்கை சூழ்ந்த பொய் யாத புதுவருவாயை யுடைய வாணன் என்பானுடைய சிறுகுடி என்னு மூருக்கு வடபாலுளதாகிய தீவிய நீரையுடைய கான்யாற்றிடத்து அவிரும் அறல் போன்று புறங்கழுத்து மறைய (வணர்குரல்) நெறிப்புப் பட்டுத் தாழ்ந்தனவோ என்க.

வணர் குரல், நெறித்த மயிர்க்கற்றை. உளர்தல் - கோதுதல். சிறுபுறம் - புறங்கழுத்து. ஊழ்த்தல் - செவ்வி யழிதல். இஃது ஊழ் என முதனிலை மாத்திரையாய் நின்றது.

நொச்சியும் ஆயமும் உள்ளாளாய் வணர் குரல் யான் போது துணைப்பத் தகரம் மண்ணுளாய் எதிலன் பொய்ம்மொழி நம்பித் திரு நகர் புலம்பப் போகிப் பாழ் நாட்டாங்கண் இயலிச் சென்ற என் மகட்குக் காதலன் பின்னுவிட வணர் குரல் கான் யாற்று அறல் போன்று நெறிபு தாழ்ந்தன கொல் என்றியைக்க.

மா அத்துப் பழம் யாமை பார்ப்பொடு கவரும் பொய்கை சூழ்ந்த வாணன் சிறுகுடி வடாஅது கான்யாறு என்க. அவ்யாற்றின் அறல் போன்று வணர் குரல் நெறிப்புப்பட்டுத் தாழ்ந்தனகொல் என்க.

முற்றாத பருவத்து வெம்பி வெளுத்த மாங்கனியை யாமை கவர்ந் தேகிப் பார்ப்பினொடு உண்டாற்போல,முதுக்குறையும் பருவத்தளல்லாத என் பேதையான மகளைத் தலைமகன் கவர்ந்து சென்று இல்லறம் நிகழ்த்தித் தன் சுற்றத்தினைப் புறந்தராநிற்பன்கொல் என்று, செவிலி தன் மகளது பருவம் நினைந்து கவன்றுளாம்.

நொச்சி, மல்லிகை விசேடம்; தெளிர்த்தல் - ஒலித்தல்; ''வீங்கு தோள், தெளிர்த்த வொள்வளை'' (சிந். 1330) என்பதும் காண்க.

## 118. குறிஞ்சி.

கறங்கு வெள் அருவிய பிறங்கு மலைக் கவாஅன் தேம் கமழ் இணர வேங்கை சூடி பெண்டிரொடு விரைஇ மறுகில் தொண்டகப் பறைச்சீர் தூங்கும் சிறு குடி பாக்கத்து இயல் முருகு ஒப்பினை வயம் நாய் பிற்பட பகல் வரில் கௌவை அஞ்சுதும் - ஒலிக்கும் வெளிய அருவியையுடைய ஓங்கியமலைச்சாரலிலே தேன்கமழ்கின்ற கொத்தையுடையவேங்கையைச் சூடிப் பெண்டிரொடு கலந்து ஆடவர் வீதியிற் றொண்டகப் பறையின் தாளத்தே ஆடுகின்ற சிறுகுடிப் பாக்கத்தின்கண்ணே இயங்காநிற்கும் ஒரு முருகனை ஒப்பையாய் வலிய உன் நாய் பின்னேவரப் பகற்போதில் நீ வருவையானால் அலருக்கு அஞ்சாநின்றேம் என்க.

தொண்டகப்பறை யாவது குறிஞ்சிநிலத்து மாக்கட்குரிய ஒரு சிறு பறை. ஆடவர் வேங்கை சூடிப் பெண்டிரொடு விரைஇத் தொண்டகப்

பறைச் சீர் தூங்கும் சிறுகுடிப் பாக்கம் என்க. பிறங்குதல் - உயர்தல்.

பாக்கமென்றது நெய்தல் நிலத்து ஊர்க்கேயன்றிக், 'கட்கொண்டிக் குடிப் பாக்கத்து, நற்கொற்கை' (மதுரை. 137-138) என்று, ஒரோவழி அரசனிருப்புக்கும் பெயராய் வந்தமை போல, ஈண்டுக் குறிஞ்சி நிலத்து ஊர்க்குப்பெயராய்வந்தது. 'சிலம்படைந்தபாக்கமெய்தி' என்பதுங்காண்க.

கன்றொடு விரைஇய இரு பிடி கயவாய் பெருகை யானை கோள் பிழைத்து இகல் கொள இரீஇய அடுபுலி வழங்கும் ஆர் இருள் நடுநாள் தனியை வருதல் அதனினும் அஞ்சுதும் - கன்றோடு கலந்திருந்த கரிய பிடியோடு கூடிய பெரிய வாயையும் பெரிய கையையுமுடைய யானையைக் கொள்ளுதலிற் பிழைத்ததனால் மாறுபாடு கொண்டு, அதனை வெளியில் இயங்கவொட்டாது ஓரிடத்தே குழுமி இருக்கும்படிசெய்த அடுகின்ற புலி சஞ்சரிக்கும் நிறைந்த இருளையுடைய பாதி யிராத்திரியில் தனியனாகி வருதலை அவ்வலரினுங்காட்டில் மிகுதியாக அஞ்சாநின்றோம் என்க. கயவாய் - பெரிய வாய்.

புலியின் அச்சத்தால் யானை வெளியில் இயங்காது தன்னிடத்தே ஒடுங்கியிருத்தலின், யானைக் கோட்பிழைத்து இகல்கொள இரீஇய அடு புலி என்றார். சிங்கம் புலி முதலியவற்றிற்கு அஞ்சி யானைகள் இரவில் வெளிப்படாது ஓரிடத்துக் குழுமி இருக்குமென்பதனைக் 'களிறு வெரீஇ அரியாளி குழீஇ வழங்காக் கழிகட்டிரவு' என்பதனாலும் அறிக. (கோவையார் 255.)

பல் நாள் புணர் குறி செய்த புலர் குரல் ஏனல் கிளி கடி பாடலும் ஒழிந்தனள் என் ஆகுவள் கொல் அளியள் நின் அளி அலது இலள் - பலநாளும் புணர்தற்குச் செய்த குறியிடமான முற்றிய கதிரையுடைய ஏனற்புனத்து ஏனலைக் கவர வரும் கிளியை ஓட்டும் பாடலைப் பாடுதலும் ஒழிந்தனள், என்ன ஆகுவளோ? என் தோழி இரங்கத்தக்காள்! நினது அருளையன்றி இனிப் பிறிதொன்றும் இல்லாதவளாயினாள் என்று, செறிப்பு அறிவுறீஇ இரவும் பகலும் வாரலென்று தோழி வரைவு கடாஅயினாள் என்க. ஏனல் அதனையுடைய புனத்திற்கு ஆகுபெயர்.

ஏனல் முற்றித் தினைப்புனம் அறுத்துத் தலைவி இற்செறிப்புண்டாளாதலால், இரவுக் குறியிடத்து வருதலொழிந்தனளேயன்றிப் பகற் புணர்ச்சிக்குச் செய்த குறியாகிய கிளி கடி பாடலும் ஒழிந்தனள் என்றுரைப்பினுமாம்.

அடுபுலியேயாயினும், யானையைக் கொள்ளும் முறையிற் பிழைத்து அதனை இரீஇயினாற் போல, நீ அறிவாற்றலுடையையேயாயினும், வரைந்து கொள்ளும் முறையிற் பிழைத்துத் தலைவியை இற்செறிப் புண்ணச் செய்தனை என்றவாறு.

## 119. பாலை.

அவர் வரைவு நன்று என்னாது அகலினும், இவள் நுதலும் தோளும் திதலை அல்குலும் வண்ணமும் வனப்பும் வரியும் வாட வருந்துவள் என திருந்துபு நோக்கி மை தோய் சிமைய மலை முதல் ஆறு தாமே தணி அமர் அழுவம் தம்மொடு துணைப்ப துணிகுவர் கொல்லோ - நம் தலைவர் வரைதல் நன்று என்னுமல் அகல்வாராயினும், இத்தலைவியது நுதலும் தோளும் திதலை பொருந்திய அல்குலும் இயற்கை யழகும் செயற்கை யழகும் செவ்வரியும் வாட வருந்துவளே என்று திருத்தமாக ஆராய்ந்து, மேகந் தவழ்கின்ற சிகரத்தையுடைய மலையிடத்து வழியிலே தாமே சென்று பகை தணிவிக்கும் போர்க்களப் பரப்பிலே தம்மொடு யாம் துணையாகச் சேர்ந்து போகும்படி நிச்சயிப்பரோ? என்று, செலவுணர்த்திய தோழிக்குத் தலைமகள் சொன்னாள் என்க.

இது பகைதணி வினையின்கண் அரசன் பிரிந்த பிரிவு; என்னை? உரஞ் சிறந்து வேலொடு தணி அமர் அழுவம் சென்றான் என்றாராகலின்.

ஆறுசெல் மாக்கள் அறுத்த பிரண்டை ஏறு பெறு பாம்பின் பை துணி கடுப்ப நெறி அயல் வறிது திரங்கும் அத்தம் உமண் சாத்து இறந்த ஒழி கல் அடுப்பின் நோன் சிலை மழவர் வெறி கொள ஊன் புழுக்கு அயரும் சுரம் வழக்கற்றது என்னாது உரம் சிறந்து ஐது இலங்கு அகல் இலை உருவின் நெய்தல் தொடை அமை பீலி பொலிந்த கடிகை மடை அமை திண் சுரை மாகாழ் வேலொடு தணி அமர் அழுவம் தம் மொடு துணைப்ப துணிகுவர் கொல்லோ - வழியே போகும் மாக்கள் அறுத்துப் போகட்ட பிரண்டைக் கொடியானது இடியேறு பெற்று நலிந்த பாம்பின் பசிய துணிக்கைபோல நெறியின் பக்கத்தே பயன் கோடலின்றியே திரங்காநிற்கும் அத்தத்திலே உப்பு வாணிகர் விட் டொழித்த கல் அடுப்பிலே வலிய வில்லையுடைய மழவர் வெறி நாற்ற முண்டாக ஊன் புழுக்கினை வேவித்து உண்டு மகிழும் சுரனானது மக்களால் போக்கொழிந்ததென்னுமல், உள்ளம் செருக்கி, கூர்மையாக இலங்குகின்ற அகன்ற இலையிடத்து அழகுடைய நெய்தலின் மாலை

யோடமைந்த மயிற்பீலியாற் பொலிந்த காம்பையும், மூட்டுவாயமைந்த திண்ணிய குழாயையும், கரிய தண்டையுமுடைய வேலோடு சென்று இருபெரு வேந்தர் பொரும் அமரைத் தணிவிக்கும் போர்க்களப் பரப்பிலே தம்மோடு யாமும் துணைப்பட்டுச் செல்லுமாறு நிச்சயிப்பரோ என்க.

'தாமே' என்புழி நின்ற ஏகாரம் தம்மையொழியப் பிறராற் றணிவித்தலது அருமை தோற்றி நின்றதாதலின், பிரிநிலைக்கண் வந்தது. தாமே துணிகுவர் கொல்லோ என்றியைத்துப் பிறர் கூறாது தாமாகவே துணிகுவரோ என்றலுமாம். தாமே திருந்தடி நோக்கித் துணைப்பத் துணிகுவர் கொல்லோ என்று இயைப்பினுமமையும்.

ஒண்சிலை மறவர் என்னும் பாடத்திற்கு ஒள்ளிய சிலையையுடைய மறவர் என்க. சிலை, ஒரு மரமுமாம். தணி அமர் அழுவம் தம்மொடு துணைப்ப என்னும் பாடத்திற்கு தனியாக விரும்பிச் செல்லும் அழுவத்திற் றம்க்குத் துணையாக என்க. அமர்தல் - விரும்புதல்.

துனிகொள மறப்புலி உழந்த வசி படு சென்னி உறு நோய் வருத்தமொடு உணீஇய மண்டி படி முழம் ஊன்றிய நெடு நல் யானை கைத் தோய்த்து உயிர்க்கும் வறும் சுனை மலை முதல் ஆறு - வெறுப்புக்கொள்ள வலிய புலியோடு பொருதுழந்ததனால் தழும்பு பட்ட சென்னியில் உற்ற நோயால் உண்டான வருத்தமொடு நீர் உண்ண விரும்பி, நிலத்தொடு படியுமாறு முழந்தாளை ஊன்றிய நெடிய நல்ல யானையானது நுதிக்கை யைத் தோய்த்து நீரின்மையிற் கதறும் வறிய சுனையையுடைய மலையிடத்து வழி என்க.

வேலுக்கு மாலை சூட்டலும் பீலி யணிதலும் மணியாத்தலும் மரபு.

ஆறு செல்லும் மாக்களால் அறுததுப் போகடப்பட்டுப் பிரண்டை வறிதே திரங்குவது போலத் தலைவராற் றுறக்கப்பட்டு எம் அழகு பயன் படலின்றியே கழியாநின்றது என்றாளாம்.

சாத்தராற் றுறக்கப்பட்ட கல்லடுப்பு மழவர்க்கு ஊன் புழுக்கயர்ந்து மகிழற்குக் கருவியானாற் போலத் தலைவராற் றுறக்கப்பட்ட யாம் அம்பற் பெண்டிற்கு அலர் தூற்றி மகிழற்கு இலக்கானேம் என்றாளாம்.

புலியோடுழந்து வடுப்பட்டு வருந்திய யானை நீருண்ணச் சுனை யிடத்து முழமூன்றிக் கையைத் தோய்த்தும் நீர் பெறாது துயிர்த்தாற்போல,

அன்னையின் கொடுஞ் சொல்லாலும், அம்பற் பெண்டிரின் அலரானும் நெஞ்சு புண்ணுற்ற யாம் அந்நோய் தீர வரையுமாறு தலைமகன் கழல் களைப் பணிந்து வேண்டியும் அருள்பெறாமல் உயிர்க்கின்றோம் என்றாளாம்.

## 120. நெய்தல்.

நெடுவேள் மார்பின் ஆரம்போல செவ்வானம் வாய் தீண்டி மீன் அருந்தும் பை கால் கொக்கினம் நிரை பறை உகப்ப எல்லை பைப்பய கழிப்பி குடவயிற் கல் சேர்ந்தன்று பல் கதிர் ஞாயிறு - முருகன் மார் பிலே கிடந்த முத்து வடம் போலச் செவ்வானத்திடத்தைப் பொருந்தி மீனை யருந்தும் பசிய காலையுடைய கொக்கின் கூட்டம் வரிசையாகப் பறந்துயரச் செல்லப் பகலை மெல்ல மெல்லக் கழித்து, அத்தகிரியை யடைந்தது பல கதிர்களையுமுடைய ஞாயிறு ; பெரு நாண் அணிந்த சிறு மென் சாயல் இவள் மாண் நலம் சிதைய ஏங்கி மதர் எழில் மழை கண் கலுழ ஆனாது அழல் தொடங்கினள் பெரும - பெரிய நாணத்தை அணிந்த சிறிய மெத்தென்ற சாயலையுடைய இவள் தனது மாண்ட நலம் கெட ஏங்கி மதர்த்த அழகிய குளிர்ந்த கண் கலங்க அழுதலைத் தொடங்கினாள் பெருமானே !

அதனால், கழி சுறா எறிந்த புள் தாள் அத்திரி நெடு நீர் இரு கழி பரி மெலிந்து வல்வில் இளையரொடு எல்லி செல்லாது பெண்ணை ஓங்கிய வெண் மணல் படப்பை அன்றில் அகவும் ஆங்கண் சிறுகுரல் நெய்தல் எம் பெரு கழி நாடு சேர்ந்தனை அசைஇ செலினே சிதைகுவது உண்டோ - கழியிடத்துள்ள சுறாப் பாய்ந்ததனாலே புண்ணுற்ற தாளையுடைய கோவேறு கழுதையானது நெடிய நீர்மையினையுடைய கரிய கழியிடத்துச் செலவு மெலிந்ததனால் வலிய வில்லையுடைய இளையரொடு நீ இரவிலே செல்லாமல், பனை வளர்ந்தோங்கிய வெள்ளிய மணற் சோலையிலே அன்றில் தன் பேடையை அழைக்கும் அவ்விடத்தே சிறிய கொத்தான நெய்தல் மலரையுடைய வெம்முடைய பெரிய கழி சூழ்ந்த நாட்டினையடைந்து இளைப்பாறிப் போனால் கெடுவது யாதாயினும் உண்டோ? என்று, தோழி பகற்குறிக்கட் டலைமகளை இடத்துய்த்து வந்து தலைமகனை எதிர்ப்பட்டு நின்று சொன்னாள் என்க.

ஞாயிறு குடவயிற் கல்சேர்ந்ததனாலும் ; இவள் கண் கலுழ அழல் தொடங்கினளாதலாலும் பெருமானே ! நீ ஊர்ந்து வந்த அத்திரி பரி மெலிந்ததனாலும், நின் இளையரொடு நீ இரவிலே நின்னூர்க்குச

செல்லாமல் எம் கழி நாட்டுச் சேர்ந்தனை அசைஇச் செலின் சிதைகுவ துண்டோ என்று தோழி தலைவியது வருத்தம் பற்றித் தலைமகனுக்குச் சொன்னாள் என்க.

சிவந்த வானத்தை நெடுவேளின் மேனிக்கும் வரிசையாகப் பறந்து செல்லும் கொக்கினத்தை முத்தாரத்திற்கும் உவமையாகக் கொண்டு, அவ்வானத்தை ஒட்டிப் பறந்து செல்லும் கொக்கின் கூட்டத்தினை நெடுவேளின் மார்பிடத்துத் துயலு முத்தாரம்போலு மென்று கூறினார் என்க.

மெலிந்தென்னும் செய்தெனெச்சம் செயவென்னெச்சப் பொருளில் வந்து காரணப் பொருட்டாயிற்று. எறிந்த புண் - எறிந்ததனாலுற்ற புண். சாயல், மென்மைத் தன்மை.

சுறா எறிந்ததனால் தனக்கு இயல்பாகவுள்ள செலவு மெலிந்து அத்திரி கழியிடத்துத் தங்கினாற்போல, நீ எதிர்ப்பட்டமையால் தனக்கு இயல்பாகவுள்ள நாணம் முதலான பெண்மைக் குணங்களொழிந்து தலைவி நின் வழியளாயினாள் என்றவாறாம்.

# நெடுந்தொகை ஆகும் அகநானூற்றுள்

முதலாவதான களிற்றியானைநிரையின் இறுதி முப்பது பாட்டிற்கு

ஸ்ரீவத்ஸ சக்ரவர்த்தி ராஜகோபாலார்யன்

எழுதிய குறிப்புரை ஸம்பூர்ணம்.

ஹரி: ஓம்.



PRINTED AT THE NOBLE PRESS MADRAS, S.E.

ஸ்ரீ:

# செய்யுண் முதற்குறிப்பகராதி



எண் - பாட்டெண்

| | | | |
|---|---|---|---|
| ,, | 32 | மராத்து | மராஅத்து |
| 132 | 15 | மணாந்து | அணைந்து |
| 134 | 12 | விலங்கெ | வில்கெ |
| ,, | ,, | கொண்டிமு | கோண்மு |
| 140 | 29 | யிசை | விசை |
| 142 | 26 | குடவுழுந்தநார் | குடவுழுந்தனு |
| 144 | 17 | சிதரற் | சிதரார் |
| 147 | 9 | சொல்வி | சொல்லி |
| ,, | 16 | சேப்ப | செப்ப |
| ,, | 21 | சிறை | சிறைப் |
| 150 | 20 | வால்அவெண் | வாஅல் வெண் |
| ,, | 31 | 712 | 511 |
| 152 | 22 | டகன்றபல்சூர்ப் | டகறப்பற்குப |
| 158 | 16 | வயமா | வாமா |

## குறிப்புரை

| | | | |
|---|---|---|---|
| 8 | 32 | அதன் | அவற்றின் |
| 19 | 25 | போல பிறர் | போலப் பிறர் |



ஸ்ரீ.

# அபிதானக்குறிப்புமுதலியவை

[எண்கள் பாட்டின் எண்கள்]